பிரசுராலய வெளியீடு

# தந்தையின் காதல்



'முத்தமிழ்க் கலா வித்துவரத்தினம்'
அமரர் அவ்வை சண்முகம் அவர்கள் நினைவாக
மதுரை காமராஜ் பல்கலைக் கழகத்துக்கு
அன்புடன் அளிக்கப்பட்டது.

**27–1–1979**

விற்பனை உரிமை :

ஸ்ரீமகள் கம்பெனி

22, பிராட்வே :: சென்னை

முதற் பதிப்பு 1944


விலை ரூ. 1-8-0.

## உள்ளடக்கம்



Printed at The Central Art Press, Madras

அறிவு அபிவிருத்தி சங்கம்
மதுரை.
பால ஷண்முகானந்த சபா.

**நம் கருத்து:**

இதில் காணப்படும் ஒவ்வொரு நாடகமும் ஒவ்வொரு விதத்தில் சுவை தருவன.

**'தந்தையின் காதல்'** ஒரு அழகிய காதல் சித்திரம். தந்தைக்கும் மகனுக்கும் நடக்கும் காதல் போர்.

**'சந்தோஷம் எங்கே?'** இன்று நாம் நடைமுறையில் காணும் வாழ்க்கைச் சித்திரங்கள்.

**'முல்லைக் கொடி'** இலக்கிய மணம் கமழும் பழந்தமிழ் காப்பியத் தழுவல்.

**'பாடலியின் காதல்'** சரித்திர சம்பந்தமான திடுக்கிடும் சோக நாடகம்.

மொழி பெயர்ப்பு மலிந்துள்ள தமிழ் நாட்டில் இது போன்ற தமிழுக்கே சொந்தமான நாடகங்களை எழுதிய நண்பர் கி. ரா. அவர்கட்கு தமிழ் மக்கள் நன்றி செலுத்துவார்கள். நாமும் செலுத்துகிறோம்.

கமலா பிரசுராலயம்

## ஆசிரியர் குறிப்பு :

இந்த நூலில் காணப்படும் நாடகங்கள் நான்கும் அகில இந்திய ரேடியோ, சென்னை நிலயத்தினரால் ஒலி பரப்பப்பட்டவை. ஒவ்வொரு நாடகத்துக்கும் நடிப்பு நேரம் முப்பது நிமிஷங்கள்.

இவற்றின் ஒலி பரப்பும் உரிமை முழுவதும் சென்னை நிலயத்தினரைச் சேர்ந்தது. மற்ற உரிமைகள் யாவும் ஆசிரியருடையவை.

வான மண்டலத்திலே மிதந்த இந்த நாடகங்களுக்குப் புத்தக வடிவு கொடுத்த கமலா பிரசுராலயத்தினருக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன். வாசகர்களும் அவர்களுக்குக் கடமைப் பட்டிருக்கிறார்கள்.

கி. ரா.

# தந்தையின் காதல்

---

| | |
|---|---|
| ராஜசிம்மன். | மந்திரி. |
| ரகுபதி சிம்மன். | காவல்காரன். |
| சஞ்சீவகன். | மஞ்சுளா. |
| சத்ரு சிம்மன். | மல்லிகா. |

***பின்னணி சங்கீதம்***

**அறிவிப்பாளர்:** *இந்தக் கதை வெகு காலத்திற்கு முன் நடந்தது....வீரச் செல்வர்களான ரஜபுத்ர மன்னர்கள் போர் முனையில் இணையற்ற சாகஸங்கள் புரிந்து வெற்றிக்கொடி நாட்டிய காலம். அவர்களுடைய சூரத்தனமும், சௌர்யமும் இன்று சரித்திரப் பிரசித்தி யடைந்துவிட்டன....எதிரியைப் புறங்காட்டி யோடச்செய்த அவர்களுடைய அதியற்புதமான வீர வாழ்க்கையைப் போலவே, அவர்களுடைய காதல் வாழ்க்கையும், வளம்பெற்று விளங்கிற்று. அந்த வாழ்க்கையில் ஒரு சம்பவத்தைச் சித்தரிக்கும் கதை இது: தந்தையும் மகனும் சௌந்தர்யோபாசனையில் போட்டியிட்டு எதிர் எதிர் நின்று போரிட்ட சோகக் கதை இது...*

***பின்னணி சங்கீதம் — பட்சிகள் சத்தம் — குறட்டைவிடும் சத்தம்—மந்திரி காலடிச்சத்தம்.***

**மந்திரி:** *இங்கேயும் இல்லையே! (சமீபத்தில்) அதோ யாரு? சஞ்சீவகரா—ஓய் சஞ்சீவகரே! சஞ்சீவகரே! —(மௌனம்) — சஞ்சீவகரே, எழுந்திரும் ஐயா. என்ன இப்படித் தூங்குகிறீர்?*

**சஞ்சீவகன்:** (எழுந்து கொட்டாவிவிட்டு) அப்பாடா, அடாடா மந்திரியாரா? வாருங்கோ, வாருங்கோ! வந்து வெகுநேரமாச்சோ?

**மந்திரி:** நீர் ஏது, இப்படி கும்பகர்ண உபாசனையிலே இறங்கி விட்டீர்? எத்தனை நேரம் எழுப்புகிறது?

**சஞ்சீவகன்:** யுத்தம் முடிஞ்சுட்டதா? மகாராஜா எங்கே?

**மந்திரி:** யுத்தம் முடிந்து, அந்தப் பிரதாபனை ஜெயித்து. கப்பம் கட்டும்படியாகப் பண்ணியாகிவிட்டது, நீர் நிர்விசாரமாகத் தூங்குகிறீர்.

**சஞ்சீவகன்:** எத்தனை ஓட்டம் ஓடியிருக்கேன் தெரியுமா? அங்கே பிடித்த ஓட்டம் அரண்மனையில் வந்துதான் நின்றேன். மகாராஜா வந்துவிட்டாரோ?

**மந்திரி:** வந்து, நேற்று பவனிகூட வந்தாச்சு. உம்மைக்கூடக் காணுமேயென்று தேடினர். ஒரு வேளை யுத்தகளத்திலேயே வீரசொர்க்கம் போய் விட்டீரோ என்றுகூட நினைத்துவிட்டோம்.

**சஞ்சீவகன்:** பேஷயாயிருக்கு. உங்களைப்போல ஆத்ம சினேகிதர்களை விட்டுவிட்டுத் தனியா நான் போவேனு? மகாராஜாவை நான் பார்க்கணுமே.

**மந்திரி:** நானும் அவரைத் தேடிக்கொண்டுதான் வந்தேன்.

**சஞ்சீவகன்:** அப்போ ரெண்டுபேருமாச் சேர்ந்து தேடுவோம். வாருங்கோ,—இருங்கோ. (காலடிச்சத்தம்) அங்கே யாரோ வரா...சேனுபதி சத்ருசிம்மர். நீங்க போங்கோ. நான் அவரை விசாரணை பண்ணிவிட்டு வரேன்.

**மந்திரி:** (போய்க்கொண்டு) சரி சரி.

**சஞ்சீவகன்:** வாங்கோ, வாங்கோ, சத்ருசிம்மரே! நமஸ்காரம்.

**சத்ருசிம்மர்:** நமஸ்காரம்.

**சஞ்சீவகன்:** இப்படி ஆஸனத்திலே உட்காருங்களேன். ரொம்ப அவசரமோ?

**சத்ரு:** கொஞ்சம் அவசரம்தான். ராஜாங்க காரியம்.

**சஞ்சீவகன்:** ஆமாம் உங்களுக்கு எப்போதும் வேலை சரியாயிருக்கும்.

**சத்ரு:** ஊம்....

**சஞ்சீவ:** என்ன செய்கிறது? பிரம்மா பிறப்பிக்கிற போதே, சிலபேருக்கு ஓயாத உழைப்பு என்று தலையிலே எழுதிவிடுகிறுன். சிலபேர்தான் என்ன நடந்தாலும் சுகவாசியா யிருக்கிறுர்கள்!

**சத்ரு:** என்ன செய்கிறது?

**சஞ்சீவ:** உங்களுடைய சாமர்த்தியத்தினுலே தான் நம்முடைய ராஜ்யம் இந்த சிரேஷ்டமான நிலையிலே யிருக்கு. அதுவும் அந்த யுத்தத்திலே உங்க திறமையைக் கண்ணுலே பார்த்தேன்.

**சத்ரு:** அதெல்லாம் யார் சொல்லப்போகிறு? எல்லாம் அவா செய்தது, இவா செய்ததுன்னு அளப்பார்கள்.

**சஞ்சீவ:** இல்லாத இடத்திலே கீர்த்தியைக் கொடுத்தா நிலைக்கவேண்டாமா? எத்தனை நாளைக்கு நடக்கும்? இப்ப இளவரசர் ரகுபதிசிம்மர் சாமான்யம்னு நான் சொல்லலே. மகாசூரன்தான். அவர் வாளைச் சுழற்றிண்டு சத்ரு சைன்யத்துக்குள்ளே, யானைக்கூட்டத்திலே சிங்கம்மாதிரி பாயறதே

ஒரு அழகுதான். ஆனு நம்ம மகாராஜாவுக்கு முன்னுலே இதெல்லாம் எந்த மூலே? ராஜ சிம்மன்னு பேரைச் சொன்னுலே சத்ருக்களுக்கு சிம்ம சொப்பனந்தானே! இதெல்லாம் யாராலே? உங்களாலே.

சத்ரு:—நான் என்ன செய்துவிட்டேன்.? எப்படி யாவது நமது ராஜாங்கம் நல்ல ஸ்திதியில் இருக்க வேண்டும். எனக்கு யாருடனும் விரோதம் கிடையாது.

சஞ்சீவ: ஆமாம், ஆமாம். நீங்க சொல்றது ரொம்ப சரி. எப்படியிருந்தாலும் நாளைக்கு அவர் தான் ராஜாவா வரப்போகிறுர். அதுக்குச் சொல்லலே.

சத்ரு: நான் போகணும். நீருந்தான் வாருமே? புது ஆயுதங்கள் சிலது பார்வையிடப் போகிறேன்.

சஞ்சீவ: இல்லே—அரண்மனையிலே கொஞ்சம் அவ சரமா வேலையிருக்கு. நீங்க போங்கோ.

சத்ரு: சரி.

சஞ்சீவ: மகாராஜா அரண்மனையிலே யிருக்காரோ?

சத்ரு: (போய்க்கொண்டு) இல்லையே (காலடியோசை)

சஞ்சீவ: மகாராஜாவை எங்கேயும் காணேமாம். அதோ, மஞ்சுளா!

சஞ்சீவகன் கனைக்கிருன்—திடுக்கிட்டு எழுந்திருக்கிருள் மஞ்சுளா—கலகல சத்தம்—சங்கீதம் நிற்கிறது.

சஞ்சீவ: பயப்படாதே அம்மா. நான்தான். மன்னிக்க ணும். ஏகாந்தத்தைக் கலைச்சுட்டேன்.

மஞ்சுளா: ஏகாந்தம் ஒண்ணுமில்லே.

சஞ்சீவ: இப்படி, மகாராஜாவைத் தேடிக்கொண்டு வந்தேன்.

**மஞ்சுளா:** *இங்கே மகாராஜா இல்லையென்கிறது தெரிந்ததோ இல்லையோ?*

**சஞ்சீவ:** *உடனே போகவேண்டியதுதான். உன் கையிலே என்ன பூச்செண்டா? ரொம்ப வாடியிருக்கே? வேறே நல்ல புதுப்பூவா பறிச்சுத் தரேனே.*

**மஞ்சுளா:** *உங்களுக்குச் சிரமம் வேண்டாம். வேணுமானுல் நானே பறித்துக்கொள்வேன்.*

**சஞ்சீவ:** *அதுக்குச் சொல்லலே....உன் முகம் ஏன் இப்படி வாடியிருக்கு? உன் கையில் உள்ள புஷ்பம் போலவே வதங்கிப்போயிருக்கே?*

**மஞ்சுளா:** *பிரம்மன் சிருஷ்டித்ததே அப்படித்தான்.*

**சஞ்சீவ:** *அப்படிச் சொல்லாதே அம்மா. உன் மனசிலே ஏதோ பெருங் கவலையிருக்கு. அதுவும் நியாயம்தானே? நான்கூட உன் அப்பா மந்திரியாரிடம் இதைப்பற்றிப் பேசினேன்.*

**மஞ்சுளா:** *சஞ்சீவகரே, உமது மனதுக்குத் தோன்றியதையெல்லாம் பேசிக்கொண்டே போகிறீரே?*

**சஞ்சீவ:** *உன் மனசில் தோணுவதை நீ பேசமாட்டேன் என்கிருய். நான் என்ன செய்கிறது?*

**மஞ்சுளா:** *நீர் வாக்குச் சாதுர்யத்தில் வல்லவர் என்பது பிரசித்தமாயிற்றே?*

**சஞ்சீவ:** *இந்தச் சாதுர்யம் உன்கிட்டப் பலிக்கலையே?*

**மல்லிகா:** *(தூரத்தில்) மஞ்சுளா! மஞ்சுளா!*

**சஞ்சீவ:** *இதோ மல்லிகா வந்துட்டா....உன்னைக் கூட்டிக்கொண்டு போகப்போகிருள்.*

**மல்லிகா:** *உன்னை எங்கெல்லாம் தேடுகிறது? மகாராணி கூப்பிடுகிருர்கள்.*

மஞ்சுளா: இதோ வந்துவிட்டேன். பூப் பறிக்கலாம் என்று இங்கே வந்தேன்.

ஆபரணங்கள் குலுங்கும் சத்தம்

சஞ்சீவ: ஆமாம் வாடின பூ தான் கிடைத்தது.

மல்லிகா; சஞ்சீவகரா, நமஸ்காரம்.

சஞ்சீவ: தீர்க்க சுமங்கலீ பவா.

மஞ்சுளா: (தூரத்தில்) நீ வரலியா?

சஞ்சீவ: (மெதுவாக) நீ போகாதே, இரு....(உரக்க) அவள் வாடாத பூக் கொஞ்சம் பறிச்சுண்டு வருவாள்.

மல்லிகா: நீ போ, இதோ வரேன். (சஞ்சீவகரிடம்) இங்கே என்ன செய்துகொண்டிருக்கிறீர்?

சஞ்சீவ: உன் தோழிக்கு என்ன உடம்பு?

மல்லிகா: ஏன்? அவளுக்கு என்ன?

சஞ்சீவ: அவளுக்கு வியாதி என்ன என்று தெரியும். அதைப் போக்கக்கூடிய வைத்தியர் யார்னு கேட்டேன்.

மல்லிகா: எல்லாம் பெரிய இடம். என்ன ஆகுமோ தெரியவில்லே.

சஞ்சீவ: மனம் இருந்தால் வழி பிறக்காதா?

மல்லிகா: எட்ட முடியாத உயரம்.

சஞ்சீவ: அவ்விடத்திலே எப்படியிருக்கு?

மல்லிகா: இடம் எல்லாம் சரியாய்த்தான் இருக்கு. காரியம் முடியவேண்டாமா?

சஞ்சீவ: பரஸ்பரம் ஒத்துப்போனல் யார் தடுக்க முடியும்?

**மல்லிகா:** நீர் யாரைச் சொல்லுகிறீர்?

**சஞ்சீவ:** நீ யாரைச் சொல்றே?

**மல்லிகா:** மந்திரி மகள் மஞ்சுளா...

**சஞ்சீவ:** சரி, அப்புறம்?

**மல்லிகா:** இளவரசர், ரகுபதி சிம்மர்.

**சஞ்சீவ:** ஓஹோ!

**மல்லிகா:** பின் வேறு யாரை நினைத்தீர்?

**சஞ்சீவ:** சரித்தான், நானும் அதைத்தான் நினைத்தேன்.

**மல்லிகா:** நேற்றுத்தான் அவருடைய மனம் தெரிந்தது. மகாராஜா பவனி வர போது நாங்கள் ஆரத்தி சுற்றினோம். இளவரசர் முனனால் குதிரைமேல் வந்தார். திடீரென்று ஒரு மல்லிகைச் செண்டை எடுத்து மஞ்சுளா மேல் எறிந்தார். நல்ல வேளை, வேறு யாரும் பார்க்கவில்லை. நான்தான் பார்த்தேன். உடனே இருவர் கண்களும் சந்தித்தன.

**சஞ்சீவ:** சரித்தான். அப்புறம் வேறே என்ன வேண்டும்?

**மல்லிகா:** ராத்திரி முழுவதும் அவள் தூங்கவேயில்லை.

**சஞ்சீவ:** பவானி அனுக்ரஹம் இருந்தால் கிடைக்காதது ஒன்றுமில்லை.

**மல்லிகா:** இன்றுகூட அவரைச் சந்திக்கத்தான் இங்கே வந்திருக்கிருள் என்று தோன்றுகிறது. அதோ பாரும், அவருடைய அரண்மனை. இங்கேயிருந்து பார்த்தால் தெரிகிறது.

**சஞ்சீவ:** சரித்தான். நான்தான் சனியன் மாதிரி வந்து விட்டேன்.

மல்லிகா: என்னமோ எனக்குப் பயமாயிருக்கிறது. நேரமாச்சு, நான் போகிறேன். மகாராணி தேடுவார்கள்.

மந்திரி: (தூரத்தில்) சஞ்சீவகரே, சஞ்சீவகரே.

சஞ்சீவ; வாரும்.

மந்திரி: (பதட்டத்துடன்) உம்மைத்தான் தேடிக் கொண்டு வந்தேன்.

சஞ்சீவ: என்ன அது? ஏன் இப்படி உடம்பு பறக்கிறது?

மந்திரி: என்ன செய்கிறது என்று எனக்குப் புரியவில்லை ஐயா...

சஞ்சீவ: என்ன? என்ன நடந்துவிட்டது?

மந்திரி: ரொம்ப ஆபத்தாப்போயிடும்போலிருக்கிறது. அவளைக் கன்னிமாடத்திலேயிருந்து அழைத்து வரவே எனக்கு இஷ்டமில்லை.

சஞ்சீவ: யாரை?

மந்திரி: மஞ்சுளாவைத்தான் ஐயா.

சஞ்சீவ: அவளுக்கு என்ன இப்போ? அழகில்லையா? குணம் இல்லையா?

மந்திரி: உமக்கு விஷயம் தெரியுமா ?

சஞ்சீவ: கேள்விப்பட்டேன்:

மந்திரி: உம்மைத்தவிர அந்தரங்கமாக எனக்கு யாருமில்லை. என்ன செய்கிறது என்று நீர்தான் யோசனை சொல்லணும்.

சஞ்சீவ: என்ன யோசனை இதுக்கு? சரின்னு சொல்லிவிடவேண்டியதுதானே? குலம் கோத்திரம் விசாரிக்கணுமா?

மந்திரி: நீர் என்ன சொல்லுகிறீர்?

சஞ்சீவ: ஏன்? சரியாத்தான் சொல்கிறேன்.

மந்திரி: என்ன ஐயா சஞ்சீவகரே, உமக்குப் புத்தி சரியாயில்லையா?

சஞ்சீவ: உமக்குத் தான் சரியாயில்லைனு தோன்றுகிறது.

மந்திரி: என்ன விபரீதம் நடந்திருக்கு!

சஞ்சீவ: விபரீதமா?

மந்திரி: ஆமாம் ஐயா, நான் என்ன சொல்லுகிறேன் என்று கொஞ்சம் காது கொடுத்துக் கேட்கப் படாதா?

சஞ்சீவ: என்ன சொல்லுகிறீர், சொல்லும்?

மந்திரி: 'மகாராஜா' ஐயா!

சஞ்சீவ: ஹூம்?

மந்திரி: ஆமாம் ஐயா, அவரைத் தேடிக்கொண்டு போனேன், அவர் அந்தப்புரத்தில் இருந்தார். மஞ்சளாவைத் தேடிக்கொண்டிருந்தார்.

சஞ்சீவ: மஞ்சுளாவையா? என்னத்துக்கு?

மந்திரி: அவளுக்கு ஒரு முத்துமாலையை வெகுமானிக்க. அவள் ஆரத்தி சுற்றினளாம் நேற்று. அதற்கு.

சஞ்சீவ: அதில் என்ன தப்பு?

மந்திரி: அது மட்டுமில்லை. அப்புறம் இரண்டு சேடிகள் பேசிக்கொண்டிருந்தது காதில் விழுந்தது. மஞ்சுளா அதிருஷ்டசாலி என்று பேசிக்கொண்டிருந்தார்கள்.

சஞ்சீவ: மகாராணிக்குத் தெரியுமா?

**மந்திரி:** தானே தெரிந்துபோகிறது. தெரிந்தால் என்ன?

**சஞ்சீவ:** மல்லிகைப்பூ....முத்துமாலை...சரித்தான்.

**மந்திரி:** என்ன, மல்லிகைப்பூவா?

**சஞ்சீவ:** ஒன்றுமில்லை, மல்லிகா ஏதோ சொன்னுள். இப்பொழுதுதான் விஷயம் புரிகிறது.

**மந்திரி:** என்ன புரிகிறது?

**சஞ்சீவ:** ராஜதிருஷ்டி விழுந்துதாலு அதிருஷ்டம்னு தான்.

**மந்திரி:** ஆபத்தும் உண்டே!

**சஞ்சீவ:** ஆமாம், அதிருஷ்டமும் உண்டு, ஆபத்தும் உண்டு.

**மந்திரி:** நான் என்ன செய்கிறது? ஒரு வழி சொல்லுமே.

**சஞ்சீவ:** என்ன வழி? பேசாமல் அம்பிகையை நம்பியிருக்கவேண்டியதுதான்.

**மந்திரி:** இதற்குத்தாலு அவளைப் பெற்று வளர்த்தேன்!

**சஞ்சீவ:** பேசாமல் இரும்.

**மந்திரி:** அவருடைய மனத்தை மாற்ற அம்பிகையால் கூட முடியாதே? என்ன செய்வது?

**சஞ்சீவ:** அம்பிகை அருள் இருந்தால் ஆகாத காரியம் இல்லை!

**மந்திரி:** ஜகதாம்பா! நீதான் காப்பாற்ற வேண்டும. அதோ இளவரசர் வருகிருர். நான் வருகிறேன்.

*மெதுவான சிறு சங்கீதம். சஞ்சீவகன் பேசத்தொடங்கியதும் சங்கீதம் நிற்கிறது*

**சஞ்சீவ:** நீர் கவலைப்படாமல் போம்.

*இளவரசர் காலடியோசை மெதுவாகக் கேட்கிறது*

**சஞ்சீவ:** இளவரசே, வரணும். ஏழை சஞ்சீவகன்.

**ரகுபதி:** ஓஹோ, நான் கவனிக்கவில்லை.

**சஞ்சீவ:** ஏதோ யோசனையிலே யிருக்காப்போ லிருக்கு.

**ரகுபதி:** யோசனை ஒன்றுமில்லை.

**சஞ்சீவ:** இந்த ஏழையால் ஆகக்கூடிய காரியமானு செய்யக் காத்திருக்கேன்.

**ரகுபதி:** எங்கே நேற்று நகரப்ரவேசத்தின் போது கூடக் காணவில்லையே?

**சஞ்சீவ:** இல்லே.... அந்த சண்டையைப் பார்த்தேன். ரொம்பக் கடுமையாயிருந்தது. எனக்கு ஒரே பயமாயிருந்தது. ஓரே ஓட்டமா ஓடி வந்துட்டேன். ஓடின அலுப்பு. படுத்ததுதான் தெரியும், மூணு நாளைக்கு எழுந்திருக்கவில்லை.

**ரகுபதி:** ஓஹோ, சரிதான்.

**சஞ்சீவ:** இன்னிக்குத்தான் மந்திரியார் வந்து எழுப்பினர்.

**ரகுபதி:** மந்திரியாரா?

**சஞ்சீவ:** ஆமாம். சண்டையிலே ஜெய்மானதைப் பற்றிச் சந்தோஷம்.

**ரகுபதி:** நீர் சந்தோஷப்படுவீர் என்றுதான் ஜெயித் தோம்.

**சஞ்சீவ:** ரொம்ப சந்தோஷம். சத்துருசிம்மரைக் கூடப் பார்த்தேன்.

**ரகுபதி:** சேனபதியா? என்ன சொல்லுகிறன்? அவனுல்தான் ஜெயம் என்கிருனே?

**சஞ்சீவ:** ஆ....ம்....அவர் சொல்றது என்ன?

**ரகுபதி:** ஊ....ம்....சரிதான்.

**சஞ்சீவ:** உங்க கையைக் காட்டுங்கோ.

**ரகுபதி:** ஏன்? ரேகை சாஸ்திரம் பார்க்கப்போகிறீரா?

**சஞ்சீவ:** இல்லே, உங்க முகத்திலே கவலைக்குறி தென் படுகிறது.

**ரகுபதி:** சரிதான். கையைப் பார்த்துச் சொல்லும், பார்ப்போம்.

**சஞ்சீவ:** எங்கே....இப்படி....ஆ....ம். மனசிலே ஒரு கவலையிருக்கு.

**ரகுபதி:** அப்புறம்?

**சஞ்சீவ:** கவலைன்னு அதைச் சொல்லப்படாது. நீங்க இப்போ ஒரு காரியார்த்தமாகத்தான் இங்கே வந்திருக்கிறீர்கள்.

**ரகுபதி:** காரியமில்லாமல் யாராவது வருவார்களா?

**சஞ்சீவ:** அந்தக் காரியம்...

**ரகுபதி:** நிறைவேறுமா, நிறை வேறுதா?

**சஞ்சீவ:** இருங்கோ; ரெண்டும் சொல்லலாம்.

**ரகுபதி:** அப்படீன்னு?

**சஞ்சீவ:** நிறைவேறவேண்டிய குறிகளும் இருக்கு. அதற்குத் தடங்கலாகவும் சில குறிகள் இருக்கு.

**ரகுபதி:** போகட்டும். அதென்ன காரியம் சொல்லும் பார்ப்போம்.

**சஞ்சீவ:** அதுவா? இருங்கோ—அதாவது 'மாணவிலே' ஆரம்பிக்கிறது.

**ரகுபதி:** மண்ணாங்கட்டியா?

**சஞ்சீவ:** *ஹ! ஹ! மல்லிகைப பூவும் மாணுத்தான்.... மங்கையும் மாணுத்தான். மல்லிகைப் பூச்செண்டு கூட மாணுத்தான்.*

**ரகுபதி:** *சஞ்சீவகரே, உம்முடைய வேடிக்கைகளிலே இதுவும் ஒன்ரு?*

**சஞ்சீவ:** *எனக்கு வேடிக்கைக்கும் வினைக்கும் வித்தியாசம் தெரியும்.*

**ரகுபதி:** *எது வேடிக்கை? எது வினை?*

**சஞ்சீவ:** *ஒரு அடி எடுத்துவைக்குமுன் நான் தீர யோசித்துத்தான் எடுத்து வைப்பேன்.*

**ரகுபதி:** *நீர் என்ன சொல்லுகிறீர்?*

**சஞ்சீவ:** *சிங்கம் புகுந்த குகைக்குள்ளே நரிக்குட்டியும் புகாது என்று தான் சொல்கிறேன்.*

**ரகுபதி:** *என்ன புதிர் போடுகிறீர்?*

**சஞ்சீவ:** (காலடிச் சத்தம்) *மகாராஜா!........ஜெய விஜயீபவா...*

**ரகுபதி:** *தந்தையே நமஸ்கரிக்கிறேன்.*

**மகாராஜா:** *சர்வ மங்களானிபவந்து. என்ன சஞ்சீவ கரே, உம்மைத்தான் தேடுகிறேன்.*

**சஞ்சீவ:** *என்னையா! புகையுள்ள இடத்திலேதானே நெருப்பிருக்கும். என் சத்தம்தான் ஒருகாதம் கேட்குமே!*

**மகாராஜா:** *உன் சத்தம் கேட்டு ரொம்ப நாளாகிறது. ஒரு வேளை உன் நெருப்பு அவிந்து போச்சோ என்று கூட நினைத்தேன்.*

**சஞ்சீவ:** *ஹ! அவ்வளவு எளிசாக இந்த ஜீவன் போகப் போகிறதா? இன்னும் என்னவெல்லாம் பார்க்கணுமோ?*

**மகாராஜா:** என்னவெல்லாம் பார்க்க இருக்கிறது?

**சஞ்சீவ:** மகாராஜாவின் ராஜ்யபாரத்திலே இதுவரையிலே நல்லதையேதான் பார்த்திருக்கு இந்தக் கண். இப்படியே என்றும் இருக்கவேணும்னு அம்பிகையைப் பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறேன்.

**ரகுபதி:** அதைப்பற்றி உமக்கு என்ன கவலை வந்து விட்டது இப்போ?

**சஞ்சீவ:** உ....ஹாும்....கவலை ஒண்ணுமில்லை.

**மகாராஜா;** ரகுபதி, சஞ்சீவகர் பேசுகிற விதமே அப்படித்தான் இருக்கும்.

**ரகுபதி:** இல்லை. அவர் இப்போது நிறையப் புதிர் போடக் கற்றுக்கொண் டிருக்கிறார்.

**மகாராஜா:** ஹாும், அப்படியா? எங்கே சஞ்சீவகரே?

**சஞ்சீவ:** ஒண்ணுமில்லே.

**ரகுபதி:** ரேகை சாஸ்திரம் கூடப் பார்க்கிறார்.

**மகாராஜா:** நீர் சொல்லவே யில்லையே? நமக்கும் இப்போது வேலையில்லை. பொழுது போகணுமல்லவா?

**சஞ்சீவ:** மகாராஜா மன்னிக்கணும், இளவரசர் பரிகாசம் செய்கிறார்.

**மகாராஜா:** இருக்கட்டுமே. வேடிக்கையாகக் கொஞ்ச நேரம் பொழுது போகட்டுமே, வாரும்.

**சஞ்சீவ:** உங்களுக்குப் பொழுது போக்கு, எங்களுக்குப் பிராணபத்து.

**மகாராஜா:** என்ன சொல்லுகிறீர்?

**ரகுபதி:** நான்தான் சொன்னேனே புதிர்போடுகிறுர் என்று.

**சஞ்சீவ:** ஒன்றுமில்லே, எனக்கு ரேகையும் தெரியாது, ஆரூடமும் தெரியாது. சங்கீதம் வேணும்ணுப் பாட்றேன். மகாராஜா கேக்கறதுக்குத் தயாராயிருக்கணும்.

**மகாராஜா:** அப்படியே, ஆகட்டும். வாரும் அரண்மனைக்குப் போவோம்.

*போகிறுர்கள்—காலடித் சத்தம்—பின்னணி சங்கீதம்-அஸ்தமனப் பட்சிகள் சத்தம்—ரகுபதி குறுக்கும் நெடுக்கும் நடக்கும் சத்தம்.*

**ரகுபதி:** (நின்று) அதோ....(மெதுவாக மஞ்சுளா வரும் சத்தம்)....பயப்படாதே, நான்தான். (நிசப்தம்)...... வேறு யாருமில்லே. இப்படிவா....இந்த முகத்திரை எதற்கு?

**மஞ்சுளா:** பயமாயிருக்கிறது.

**ரகுபதி:** இங்கே யார் வரப்போகிறுர்கள், இந்த நேரத்தில்?....வா....உன்னே என் கண்ணுரப் பார்க்கிறேன். இன்றையப்பொழுதைக் கழிக்க முடியவில்லே. எனக்குச் சக்தியிருந்தால் வானத்தில் தாவி அந்தச் சூரியனே மென்னியைப் பிடித்து மேற்கே தள்ளி இருப்பேன்.

**மஞ்சுளா:** நான் சீக்கிரம் அரண்மனேக்குப் போக வேண்டும். யாராவது கவனித்துவிடுவார்கள். என்னுல் வராமலிருக்கவும் முடியவில்லே....பயம் தாங்க முடியவில்லே.

*சலசலவென்ற சத்தம்.*

**மஞ்சுளா:** ஐயோ....

**ரகுபதி:** ஒன்றுமில்லே, ஒனுன். ஏன் இப்படிப் பயப்படுகிருய்? (நிசப்தம) மஞ்சுளா, நேற்று முதல், உன்னேப் பார்த்தது முதல்........பைத்தியம் பிடித்ததுபோல் இருக்கிறது. எதைக் கண்டாலும் பிடிக்கவில்லே...உன்னே அடையாவிட்டால் என் ஜன்மம் சாபல்யம் அடையாது.

**மஞ்சுளா:** மூன்று வருஷங்களாக உங்கள் உருவம் என் இதயத்தில் இடம் பெற்றுவிட்டது. ஆனுல் நினேத்துப் பார்க்கக்கூடப் பயமாயிருக்கிறது. முடவனுக்குக் கொம்புத்தேன் கிட்டுமா?

**ரகுபதி:** நீ இல்லாத உலகம் ஒரே சூன்யமாக இருக்கிறது. உன்னேப் பாராமல் ஒரு கணம்கூட இனி இருக்க முடியாது.

**மஞ்சுளா:** என் எண்ணம் ஈடேறுமா? என் ஆசை நிறைவேறுமா?

**ரகுபதி:** நிறைவேற என்ன தடை?

**மஞ்சுளா:** உங்களேக் கனவிலும் நினேக்க எனக்கு அருகதை யிருக்கிறதா?

**ரகுபதி:** ஏன்?

**மஞ்சுளா:** தரையில் கிடக்கும் புழு வானத்தில் பறந்து உலாவ ஆசைப்படலாமா?

**ரகுபதி:** உண்மையான ஆசையிருந்தால் அடைய முடியாதது ஒன்று உண்டா?

**மஞ்சுளா:** தாங்கள் இந்த ராஜ்யத்தின் அதிபதி. நானே தங்கள் அடிமை. தங்களுக்கு அருகில் நின்று சேவை செய்யும் பாக்கியம் கிடைத்தாலும் போதும். அதுவே எனக்கு சாயுஜ்யம்.

**ரகுபதி:** மஞ்சுளா! என்னுடைய ஆசையைத் தடை செய்ய யாராலும் முடியாது.

**மஞ்சுளா:** சொல்லுவதை உணராமல் சொல்லுகிறீர்கள்.

**ரகுபதி:** பவானிமீது ஆணை! நான் உன்னைத் தவிர வேறு யாரையும் மணப்பதில்லை!

**மஞ்சுளா:** ஐயோ, வேண்டாம். எனக்காக உங்கள் வாழ்வைக் கெடுத்துக் கொள்ளலாமா?

**ரகுபதி:** மஞ்சுளா! என்னுடைய வாழ்வும் தாழ்வும் என்னுடைய கையில்தான் இருக்கிறது. என்னுடைய நெஞ்சில்—எனது ஆசையில்தான் இருக்கிறது. நீ என் பக்கத்தில் இருந்தால் அதுவே எனக்கு சொர்க்கம். அதுவே சர்வலோகாதிபத்யம். நாளைக்கே அப்பாவிடம் கேட்கப் போகிறேன்.

**மஞ்சுளா:** ஐயோ, வேண்டாம். வரப்போகும் ஆபத்தை அறியாமல் பேசுகிறீர்கள். நீங்கள் சொன்ன வார்த்தைகளே எனக்குப் போதும். இந்த நினைவிலே....இந்தக் கணநேர இன்ப நினைப்பிலே ...ஆயிரம் வருஷம் வேண்டு மானாலும் நான் கழிப்பேன்.

**ரகுபதி:** மஞ்சளா, கவலைப்படாதே. என் இஷ்டத்துக்கு விரோதமாக மகாராஜா நடக்கமாட்டார். நாளையே நான் பேசி முடிவு செய்துவிடுகிறேன். நீ பயப்படாமல் போ. (போகிருன்)

**மஞ்சுளா:** தாயே பவானி....

*துரிதமான சங்கீதம்—அரண்மனை—மகாராஜாவின் அந்தரங்க மஹால்—காவல்காரர்கள் நடக்கும் சத்தம்.*

**மகாராஜா:** யாரது?



2

**காவல்:** மகாராஜா, சேனுபதி.

**மகாராஜா:** வரச்சொல்.

**காவல்:** உத்தரவு.

*சேனுபதி வரும் சத்தம்—ராணுவ நடை.*

**சத்ருசிம்:** மகாராஜா, சத்ருசிம்மன் நமஸ்கரிக்கிறேன்.

**மகாராஜா:** என்ன, சத்ருசிம்மரே?

**சத்ருசிம்:** இல்லை....சொந்த விஷயமாய்.

**மகாராஜா:** என்ன அது? சொல்லுமே?

**சத்ருசிம்:** இல்லை....விஷயம் என்னவோ சாதாரணம் தான்...ஆனுல்.

**மகாராஜா:** என்ன இது? ஏதோ சொல்ல முடியாமல் திண்டாடுகிறீரே? உம்மிடத்தில் எனக்கு என்றைக்கும் அபிமானம் உண்டு. உமது குடும்ப விஷயமாய் அக்கரை உண்டு...தாராளமாய்ச் சொல்லலாம்.

**சத்ருசிம்:** மகாராஜா தவருய் நினைத்துவிட்டீர்கள். என்னுடைய சொந்த விஷயமாய் நான் பேசவரவில்லை. ராஜாங்கத்துக்குச் சம்பந்தமான விஷயம்.

**மகாராஜா:** என்ன? சொல்லுமே?

**சத்ருசிம்:** இளவரசர்....

**மகாராஜா:** அவனுக்கு என்ன?

**சத்ருசிம்:** அது ஒன்றும் பிரமாதமில்லை...நேற்று... மந்திரியாரின் புதல்வி...

**மகாராஜா:** மஞ்சுளா?...

**சத்ருசிம்:** பேசுவது தவறு இல்லை....ஆனுல் அஸ்தமன சமயத்தில் தன்னந்தனியாய்...வேறு யாராவது பார்த்தால் அபவாதத்துக்கு இடமாகும்....

**மகாராஜா:** *நேற்று?*

**சத்ருசிம்:** *ஆமாம்.*

**மகாராஜா:** *இன்னும் யாராவது இருந்தார்களா?*

**சத்ருசிம்:** *ஒருவருமில்லை. நான்கூட யதேச்சையாகத் தான் அந்தப்பக்கம் போனேன். பேச்சுக்குரல் கேட்டதும் சமீபித்துப் பார்த்தேன்.*

**மகாராஜா:** *அவர்கள்தான் என்று நிச்சயமாய்ச் சொல் வீரா?*

**சத்ருசிம்:** *சந்தேகமில்லாமல். அதென்ன அப்படிக் கேட்கிறீர்கள்? நிச்சயமில்லாத செய்தி என் வாயி லிருந்து வராது. அதுவும் சமஸ்தானத்தின் க்ஷேமத்தைப்பற்றிய விஷயம் எதுவாகிலும்...*

**மகாராஜா:** *சரிதான்.*

**சத்ருசிம்:** *நான் சொன்னதை வித்தியாசமாய் நினைக்கக் கூடாது.*

**மகாராஜா:** *சரி, சரி. நீர் போகலாம்.*

**சத்ருசிம்:** *எப்போதும் இந்த அடிமைக்குத் தங்கள் ஊழியம்தான் லக்ஷியம்.*

**மகாராஜா:** *நீர் போகலாம்.*

**சத்ருசிம்:** *உத்தரவு.* (போகிறான்—காவல்காரன் வருகிறான்.)

**மகாராஜா:** *என்ன?*

**காவல்:** *இளவரசர்.*

**மகாராஜா:** *வரச்சொல்.*

**காவல்:** *உத்தரவு.* (போகிறான் —ரகுபதி வருகிறான்)

**ரகுபதி:** *தந்தையே, நமஸ்கரிக்கிறேன்.*

**மகாராஜா:** *உம்....என்ன விசேஷம்?*

**ரகுபதி:** *என் சொந்த விஷயமாய்ப் பேசவந்தேன்.*

**மகாராஜா:** *அது என்ன?*

**ரகுபதி:** *இல்லை...நான்....கல்யாணம் செய்துகொள்ள விரும்புகிறேன்.*

**மகாராஜா:** *ரொம்ப நல்ல காரியம். நமது பிரஜைகள் இந்த சுபமான செய்தியைக் கேட்க சந்தோஷப் படுவார்கள்.*

**ரகுபதி:** *வெகு சீக்கிரத்திலேயே முடிக்கவேண்டும்.*

**மகாராஜா:** *அப்படி என்ன அவசரம்? முறைப்படி பிர கடனம் செய்து, தகுந்த வதுவாகத் தேர்ந் தெடுத்து, சகலமான ஏற்பாடுகளையெல்லாம் செய்து முடிக்கக் குறைந்தது மூன்று மாதமாவது வேண்டாமா?*

**ரகுபதி:** *அவ்வளவு காலம் எதற்கு? வதுவை நானே தேர்ந்தெடுத்துவிட்டேன். உங்கள் ஆசீர்வாதம் தான் வேண்டும்.*

**மகாராஜா:** *ஹ! ஹ! ஹ! இதென்ன நூதன வழக்க மாய் இருக்கிறதே? போகட்டும். இந்த ராஜ்யத் துக்கு ராணியாக வரப்போகிற அந்தப் புண்யவதி யாரோ?*

**ரகுபதி:** *தாங்கள் பார்த்திருக்கலாம், இந்த அரண் மனைக்குள்தான் இருக்கிறாள்.*

**மகாராஜா:** *அது யார்?*

**ரகுபதி:** *நமது மந்திரியின் மகள்...மஞ்சுளா...*

**மகாராஜா:** *என்ன?*

**ரகுபதி:** *அவளை நான் மனப்பூர்வமாகக் காதலிக் கிறேன். அவளையன்றி நான் யாரையும் மணந்து கொள்ளமாட்டேன்.*

**மகாராஜா:** *ரகுபதி!*

**ரகுபதி:** *தந்தையே.*

**மகாராஜா:** உன்னுடைய விவாக விஷயம் ராஜாங்கத்தின் விஷயம். இந்த ராஜாங்கத்திற்கு அதிபதி நான்.

**ரகுபதி:** என்னுடைய சொந்த விஷயத்தில் தலையிட எந்த ஸாம்ராட்டுக்கும் அதிகாரம் இல்லை.

**மகாராஜா:** ரகுபதி, வீணாக வார்த்தைகளை வாரி இறைக்காதே.

**ரகுபதி:** வார்த்தையை வீணுக்குவது தாங்கள்தான்.

**மகாராஜா:** வேண்டாம், நம்முடைய குலம் என்ன? அந்தஸ்து என்ன? நமக்குத் தகுந்த இடமாகப் பார்ப்போம், பொறு.

**ரகுபதி:** இதயத்தோடு இதயம் ஒன்று சேரும்போது குலமும் கோத்திரமும் கிட்டவராது.

**மகாராஜா:** பதறுதே, வேண்டாம், அவளை மறந்து விடு.

**ரகுபதி:** அவளின்றி என்னுலே வாழ முடியாது.

**மகாராஜா:** ரகுபதி, நான் சொல்வதைக் கேள். இன்னும் நன்ருக யோசி.

**ரகுபதி:** நான் யோசிப்பதற்கு ஒன்றுமில்லை. என்னுடைய சந்தோஷத்தில உங்களுக்கு அக்கறை இருக்கும் என்று நினைத்தேன். அது தவறு, நான் போகிறேன்.

**மகாராஜா:** நிதானமாக யோசி.

**ரகுபதி:** யோசிக்கவேண்டியது தாங்கள்தான்.

(போகிருன்)

**மகாராஜா:** யாரங்கே?

**காவல் *1*:** மகாராஜா...

**மகாராஜா:** போய் மந்திரி மகள் மஞ்சுளா எங்கேயிருக்கிருள் என்று பார்த்துவா, சீக்கிரம்.

**காவல் 1:** *உத்தரவு.* *[போகிறுன்]*
**மகாராஜா:** *என்ன அது?*
**காவல் 2:** *மகாராஜா, சஞ்சீவகர்.*
**மகாராஜா:** *இப்பொழுது பார்க்க முடியாதென்று சொல்.*
**காவல் 2:** *உத்தரவு [போகிறுன் – காவல் 1 வருகிறுன்]*
**காவல் 1:** *மகாராஜா*
**மகாராஜா:** *எங்கே?*
**காவல் 1:** *நந்தவனத்தில் மகாராஜா.*
**மகாராஜா:** *இன்னும் யார் கூட?*
**காவல் 1:** *வேறு யாருமில்லை....மல்லிகா என்ற தோழி.*
**மகாராஜா:** *சரி போ.*

*மகாராஜா எழுந்து போகிறுர்—துரிதமான சங்கீதம்.—நந்தவனம்—பட்சிகளின் சத்தம்.*

**மஞ்சுளா:** *மல்லிகா, இன்று என்னவோ பீதியாயிருக்கு. மனது காரணமில்லாமல் பயப்படுகிறது.*
**மல்லி:** *எது நடந்தாலும் பவானியின் மேல் பாரத்தைப் போட்டுவிடு. அவள் காப்பாற்றுவாள்.*
**மஞ்சுளா:** *அவருக்கு ஏதாவது ஆபத்து வந்துவிடுமோ?*
**மல்லி:** *அவருக்கு ஒன்றும் நேராது, பயப்படாதே. அவர் ஒரு ஆண் சிங்கம்.*
**மஞ்சுளா:** *அவருடன் நேற்று பேசும்போது எனக்கு எப்படியிருந்தது தெரியுமோ? அப்படியே அவரையே பார்த்துக்கொண்டு எத்தனை யுகம் வேணுமானுலும் உட்கார்ந்திருப்பேன். வேறு ஒன்றுமே வேண்டியதில்லை.*
**மல்லி:** *இரு, யாரோ வருகிறுர்கள்...*

மஞ்சுளா: அவராய்த்தானிருக்கும்...நீ போ...

மல்லி: மகாராஜா...

மஞ்சுளா: இரு, இரு நானும் வருகிறேன். (மகாராஜாவின் காலடிச் சத்தம்)

மகாராஜா: ஏன் ஓடுகிறீர்கள்....போகவேண்டாம், நில்லுங்கள்.

மல்லி: மகாராணிக்குப் பூஜைக்குப் புஷ்பம்கொண்டு போகிறோம்.

மகாராஜா: சரி, நீ போ.

மல்லிகா போகிறாள்—மஞ்சுளாவும் கூடப்போக முயற்சிக்கிறாள்.

நீ போகாதே......(நிசப்தம்) ....மஞ்சுளா, இப்படி வா...ஏன் பயப்படுகிறாய்? வா....இந்தப் பளிங்காசனத்தில் உட்கார்.

மஞ்சுளா: மகாராஜா....

மகாராஜா: மற்றவர்களுக்கெல்லாம் நான் மகாராஜாதான். உனக்கில்லை. (நிசப்தம்) சும்மா வா, நின்றால் உன் பூப்போன்ற பாதம் நோவும் நீ வரமாட்டாயா? நான் அங்கே வரட்டுமா?

மஞ்சுளா: மகாராஜா, நான் ஏழை....

மகாராஜா: உனக்குப் பாக்கியம் வந்திருக்கிறது. ஆனால் எவ்வளவு ஐஸ்வர்யத்தைக் கொட்டினும் உன் அழகுக்கு ஈடாகாது. உன் புன்முறுவல் ஒன்றைக்கொண்டே பதினான்கு லோகங்களையும வாங்கலாம்.

மஞ்சுளா: (விம்மி) மன்னிக்கவேண்டும்... தகாது...தங்களுக்குத் தகாது.

**மகாராஜா:** *மஞ்சுளா....என்னைப் பார். நான் நன்ருயில்லையா? எனக்கு சௌர்யம் இல்லையா?*

**மஞ்சுளா:** *வீரமும் சௌர்யமும் தர்மம் இன்றி தனித்து நிற்கமுடியாது.*

**மகாராஜா:** *எனக்கு தர்மோபதேசம் செய்யப்போகிருயா?*

**மஞ்சுளா:** *அவ்வளவு சக்தி எனக்கு இல்லை.*

**மகாராஜா:** *மஞ்சுளா, நான் உனக்கு ராஜா என்பதை மறந்தாயா? என் உத்தரவை மீற உனக்கு தைரியம் உண்டா?*

**மஞ்சுளா:** *அவசியம் வந்தால் தைர்யம் பிறக்கும்,*

**மகாராஜா:** *வீண்வார்த்தை யாடாதே.*

**மஞ்சுளா:** *மிருகேந்திரனை சிம்மம் கேவலம் நரியின் உடலை இச்சிக்காது.*

**மகாராஜா:** *பேஷ்! நன்ருய்ப் பேசுகிருயே?*

**மஞ்சுளா:** *இன்னும் உங்கள் ராஜ்யத்தில் பேச்சு சுதந்திரம் இருக்கிறது என்பது சந்தோஷப்படவேண்டிய விஷயம்தான்.*

**மகாராஜா:** *(கோபம்) வாயாடி! உன்னை என்ன செய்கிறேன் பார்!*

*எழுந்திருக்கிருன்—அப்போது காவல்காரன் ஓடிவருகிருன்.*

**மகாராஜா:** *என்னடா அது?*

**காவல்:** *மகாராஜா! மகாராஜா! சேனுபதி வருகிருர்!... சத்ரு பிரதாபன் மூலபலத்துடன் படையெடுத்து விட்டாராம்.*

**மகாராஜா:** *என்ன அது? பிரதாபனு!*

**சத்ருசிம்:** (ஓடிவந்து) மகாராஜா, நம் எதிரி பிரதாபன் பெரிய சைன்யத்துடன் வந்துவிட்டான். நம் அசுவப்படையை அனுப்பியிருக்கிறேன்.

**மகாராஜா:** அவனுக்கு எப்படி முடிந்தது?

**சத்ருசிம்:** அதுதான் தெரியவில்லை. காலதாமதம் செய்யக்கூடாது. நான் போகிறேன்.

**மகாராஜா:** இரும்....போய் இளவரசனை உடனே அழைத்து வரச்சொல்லும.

வெகு துரிதமான சங்கீதம்.

**சத்ருசிம்:** உத்தரவு.

**மகாராஜா:** மந்திரியார் எங்கே?

**சத்ருசிம்:** அரண்மனையில் இருந்தார்....இதோ இளவரசர்.

**ரகுபதி:** தந்தையே.

**மகாராஜா:** ரகுபதி, நம்முடைய சத்ரு பிரதாபன் படை யெடுத்துவிட்டானும்.

**ரகுபதி:** கேள்விப்பட்டேன்.

**மகாராஜா:** நமது சைன்யத்தை நடத்திச் செல்.

**ரகுபதி:** சேனுபதி? (சங்கீதம் நிற்கிறது)

**மகாராஜா:** அவருக்கு வேலையிருக்கிறது.

**ரகுபதி:** என்னுல் முடியாது.

**மகாராஜா;** என்ன!

**சத்ருசிம்:** இளவரசர்.

**ரகுபதி:** என்னுல் சைன்யத்தை நடத்திச் செல்ல முடியாது.

**மகாராஜா:** ஏன்?

**ரகுபதி:** *என்னுடைய வாழ்வுக்கு முக்கியமான விஷயத்தில் இந்த ராஜாங்கத்துக்கு அக்கரையில்லை. எனக்குமட்டும் ராஜாங்க விஷயத்தில் எப்படி அக்கரையிருக்கும்?*

**மகாராஜா:** *அப்போது?*

**ரகுபதி:** *உங்கள் உத்தரவை மீறுகிறேன்....தண்டனை கொடுக்கலாம்.*

**மகாராஜா:** *சத்ருசிம்மரே, இளவரசரைக் காவலில் வையும்....ஊம்....*

**சத்ருசிம்:** *மகாராஜா!*

**மகாராஜா:** *சொல்வதைச் செய்யும்!*

**சத்ருசிம்:** *உத்தரவு....டேய்....(காவற்காரர்கள் ஆயுதங்கள் சப்தம்)*

**ரகுபதி:** *நீங்கள் என் உடலை அழிக்கலாம். என் உள்ளத்தை....என் உள்ளத்திலுள்ள ஆசையைக் கொல்ல உங்களால் ஆகாது. நீங்கள் மகாராஜா ....மனித உணர்ச்சி சிறிதும் இல்லாத கல்நெஞ்சர்.*

**மகாராஜா:** *சண்டையைக் கண்டு மிரளும் ரஜபுத்திரன் இதுவரையில் நம் குலத்தில் உதித்ததில்லை.*

**ரகுபதி:** *வரம்புமீறி சிருங்காரத்தில் இச்சைகொண்ட மன்னரும் இருந்ததில்லை.*

**மகாராஜா:** *சேனுபதி....உம்....கடமையைச் செய்யும்.*

**ரகுபதி:** *சேனுபதியாரே, கஷ்டப்படாதேயும். நானுகவே வருகிறேன்.*

*ஆயுதங்களின் சத்தம் மறைகிறது—பேரிகை—யுத்த சங்கீதம் கேட்கிறது.*

**மகாராஜா:** *சத்ருசிம்மரே, தயார்செய்யும். நானே சைன்யத்தை நடத்திச் செல்கிறேன். அவன் திமிரை அடக்குகிறேன். (சங்கீதம் அதிகரிக்கின்றது)*

**சத்ருசிம்:** *ஜெய விஜயீபவ....*

**குரல்கள்:** *ஜெயவிஜயீபவ! ஜெயவிஜயீபவ!*

*யுத்த சங்கீதம் அடங்குகிறது.*

**மந்திரி:** *சஞ்சீவகரே, சஞ்சீவகரே.*

**சஞ்சீவ:** *வாருங்கோ, எனன?...என்ன ஆயிற்று?*

**மந்திரி:** *வாரும், நேரமில்லை...மகாராஜாவைப் பிடித்து விட்டார்கள்.*

**சஞ்சீவ:** *ஆ!....*

**மந்திரி:** *ஆமாம், போய் மகாராணியின் உத்தரவில் இளவரசரை விடுதலை செய்துகொண்டு வருவோம்.*

**சஞ்சீவ:** *அதற்கு உத்தரவு என்ன? வாரும். நேராகச் சிறைச்சாலைக்குப் போவோம்.*

*காட்சி மாற்றம்—சங்கீதம்—படைவீரர்கள் அணிவகுத்துச் செல்லும் சங்கீதம்.*

*கோவில் மணியடிக்கும் சத்தம்.*

**மஞ்சுளா:** *தாயே, உன்னையே நம்பி யிருக்கிறேன். எப்படியும் அவர் சுகமாய்த் திரும்பவேண்டும். அம்பிகே, உன் கருணைக்கு எல்லையேது? உன்னையன்றி எனக்கு வேறு கதியில்லை. நீயும் என்னைக் கைவிட்டால் இதோ இந்தக் கத்தியின் முனை தான் எனக்கு அடைக்கலம்.*

**மல்லி:** *வேண்டாம் அம்மா...*

**மஞ்சுளா:** *நீயா....*

**மல்லி:** *ஆமாம், உன்னை அரண்மனையெல்லாந் தேடினேன். காணவில்லை. இங்கே பார்க்கலாம் என்று வந்தேன்.*

**மஞ்சுளா:** எனக்கு மனதுக்கு நிம்மதியே இல்லை. அவர் சுகமாகத் திரும்பவேண்டுமே என்று ஒரே பீதியாக இருக்கிறது.

**மல்லி:** இளவரசர் யுத்தத்தை ஜெயித்துக்கொண்டு வரப்போகிறார். நீ பார்.

**மஞ்சுளா:** ஏதாவது தகவல் வந்ததா?

**மல்லி:** ஒன்றுமில்லை. மகாராணி ஓயாமல் அழுது கொண்டேயிருக்கிறார்கள்.

**மஞ்சுளா:** அம்பிகைதான் காப்பாற்ற வேண்டும்.

**மல்லி:** இரு, குதிரைச் சத்தம் (குதிரையின் காலடிச் சத்தம் கேட்கிறது) இங்கேதான் வருகிறது........ நாம் இப்படி மறைந்துகொள்வோம்.

குதிரைச் சத்தம் சமீபித்து நிற்கிறது. போர்வீரன் நடைச் சத்தம்.

**ரகுபதி:** தாயே, பவானி, என்னைக் காப்பாற்றினாய்... என் மானத்தைக் காப்பாற்றினாய். நானும் ரஜபுத்ரன் என்று இன்று காட்டிவிட்டேன். என்னுடைய இஷ்டத்தைப் பூர்த்திசெய்து என் உயிரையும் நீதான் காப்பாற்றவேண்டும் (பல குதிரைகள் வரும் சத்தம்) யாரது?........

**மகாராஜா:** (ஓடிவந்து) ரகுபதி...உன்னைப் பெற்றதன் பயனை இன்றுதான் அடைந்தேன். நீ உண்மையான ராஜபுத்ரன். என் உள்ளம் சந்தோஷத்தால் பொங்குகிறது.

**ரகுபதி:** தந்தையே....அம்பிகை என் மானத்தைக் காப்பாற்றினாள். தாங்கள்தான் என் உயிரைக் காப்பாற்ற வேண்டும்.

**மகாராஜா:** ரகுபதி?

**ரகுபதி:** ஆம், மஞ்சுளாவைத்தான் கேட்கிறேன்....

மகாராஜா: எது கேட்டாலும் தருகிறேன்...மஞ்சுளாவை மறந்துவிடு.

ரகுபதி: நீங்கள் எது கொடுத்தாலும் வேண்டியதில்லை. மஞ்சுளாதான் வேண்டும்.

மகாராஜா: என்உயிர் உள்ளவரையில் அது நடக்காது.

ரகுபதி: என் உயிர் போவது அப்போது நிச்சயம்.

மகாராஜா: பிதற்றுதே,

ரகுபதி: நீர்தான் பிதற்றுகிறீர். அதிகார மமதை கொண்டு பேசுகிறீர்.....பெற்ற பிள்ளையைப் பலியிட நினைக்கிறீர். நீர் ஒரு மன்னனு?....உமக்கு ஒரு ராஜ்யமா?

மகாராஜா: ரகுபதி!....

மல்லி: (தூரத்தில்) ஐயையோ மஞ்சுளா....

மஞ்சுளா: (தூரத்தில்) ஜே! பவானி!...

சோக சங்கீதம் தொடங்கி முடிவுவரையில் கேட்கிறது.

மகாராஜா: என்ன...என்ன....(ஓடுகிருர்கள்)

ரகுபதி; மஞ்சுளா...

மகாராஜா: என்ன?

மல்லி: கத்தியை நெஞ்சில் பாய்ச்சிவிட்டாள். நான் பார்ப்பதற்குள் எல்லாம் முடிந்துவிட்டது.

ரகுபதி: இதோ இந்தப் பழியையும் ஏற்றுக்கொள்ளும். அவளது உள்ளத்தைத் தழுவிய அதே கத்தி என் உள்ளத்தையும் தழுவட்டும்....பவானி!

மகாராஜா: ஐயோ பாவி!....

மல்லி: ஐயையோ் பாவி!

மகாராஜா: இப்படியா முடிந்தது! பவானி.

சோக சங்கீதம் முடிகிறது.



# சந்தோஷம் எங்கே?

---

| | |
|---|---|
| விஷ்ணு | சஞ்சீவிராயர் |
| எஜமான் | குரல் |
| குமாஸ்தா | லக்ஷ்மி |
| டிரைவர் | எஜமானி |
| ராமன் | தாயார் |
| பையன் | கிழவி |
| நாய்ஞ | மனைவி |
| போலீஸ் | வேலைக்காரி |
| கவி | |

*கோவில் மணி அடிக்கும் சத்தம்—மணி ஓசை வரவரத் தேய்ந்து தூரத்தில் கேட்கிறது. திருப்பல்லாண்டு பாடும் கோஷ்டிப் பாட்டு—இரண்டு மூன்று அடிகள் பாடியதும் முடிகிறது.*

**லக்ஷ்மி:** *பிரபு, எனக்கு வெகுகாலமாக ஒரு சந்தேகம்.*

**விஷ்ணு:** *என்ன அது?*

**லக்ஷ்மி:** *மனிதர்கள் சந்தோஷமடைவதற்குக் காரணம் என்ன?*

**விஷ்ணு:** *லக்ஷ்மி, உனக்கேன் இந்தச் சந்தேகம் திடீரென்று இப்போது வந்தது?*

**லக்ஷ்மி:** *இல்லை...என்னுடைய கடாக்ஷம் இருந்தால் மனிதர்கள் சந்தோஷமடைவார்கள் என்று கேள்விப்பட்டதுண்டு. ஆனால் இந்தக்காலத்தில் ஒருவர் முகத்திலும் சந்தோஷக்களையே காணவில்லை.*

**விஷ்ணு:** *மனிதர்கள் சந்தோஷமாயிருப்பதற்குக் காரணம் அவர்கள் சந்தோஷமாயிருப்பதுதான். உன்னுடைய அனுக்ரஹம் இருக்கும்வரையில் தனத்துக்குக் குறைவில்லை.*

**லக்ஷ்மி:** *மனிதர்கள் தனத்தைத்தானே தேடி அலைகிறார்கள்? தேடிய பொருள் கிட்டியதும் சந்தோஷ மடையவேண்டியதுதானே நியாயம்?*

**விஷ்ணு:** *ஆம். தர்க்க சாஸ்திரத்தின்படி நியாயம் தான். ஆனால் மனிதர்கள் தேடுவது தனத்தைத் தான்; சந்தோஷத்தையல்ல.*

**லக்ஷ்மி:** *அப்படியென்றால்?*

**விஷ்ணு:** *பொருள் இருந்தால் சந்தோஷமும் இருக்க வேண்டும் என்று அவசியம் இல்லை. இதோ... நீயே பார்.*

*சங்கீதம்—விஷ்ணுவின் குரல் மெதுவாகக் கேட்கிறது.*

**விஷ்ணு:** *அதோ அவன் பெரிய கோடீஸ்வரன். அதோ அந்தப் பெரிய மாளிகைதான் அவனுடையது. அதைப்போல் இன்னும் 10 மாளிகைகள் அவனுக்கு உண்டு.*

*சங்கீதம்—துரிதமான வாத்திய கோஷ்டி—மோட்டார் வேகமாக வந்து நிற்கிறது.—கதவு படாரென்று மூடிக்கொள்ளுகிறது—காலடிச் சத்தம்—பூட்ஸ் 'டக் டக்' என்று கேட்டுக் கொண்டே போகிறது. பிறகு சடக்கென்று நிற்கிறது.*

**வேலைக்காரி:** [மெதுவாக] *எசமான் வந்துவிட்டார்.*

**எஜமானி:** [முக்கிக்கொண்டே] *அ ம் ம ா... அ ப் ப ா... எங்கே?*

**எஜமான்:** *எப்படியிருக்கு?*

**எஜமானி:** *அம்மா... அய்யோ அப்பப்பா... அப்பா.*

**எஜமான்:** டாக்டர் வந்தாரா?

**எஜமானி:** இல்லே, உங்களுக்கு வர ஒழியலையா? அம்மா, அய்யோ, போச்சு.

**எஜமான்:** தலைவலியா?

**எஜமானி:** தலைவலி பிளக்குது...அ ப் ப ா...அம்மா... முதுகு வலி அய்யோ...இடுப்புவலி அம்மா.... எல்லாவலியும் சேர்ந்திட்டிருக்கு...நீங்க காப்பி சாப்பிட்டயளா ?

**எஜமான்:** காப்பி இருக்கட்டும்...போய் டாக்டரைக் கூட்டிவரச் சொல்றேன்...டிரைவர்!

**டிரைவர்:** [தூரத்தில்] எஜமான்.

**எஜமான்:** காரை எடுத்துக்கிட்டுப்போய் டாக்டரைப் பார்த்துட்டுவா...சீக்கிரம் போ—

**டிரைவர்:** சரிங்க.

**எஜமான்:** ஏன் நிக்கிறே?

**டிரைவர்:** இல்லே...பெட்ரோல் வாங்கலே. வரவ ரல்லே இருக்காதுபோலே யிருக்குது.

**எஜமான்:** இருக்காதா? நேற்றுத்தானே 5 காலன் போட்டே? உம்...

**டிரைவர்:** நேற்று 4 டிரிப் ஸ்டேஷனுக்குப் போச்சு. ராத்திரி செங்கல்பட்டு போயிட்டு வந்தோம். காலையிலேதான் பெரிய துரைக்காகப் போச்சு.

**எஜமான்:** சரி, சரி, உன்கிட்டப் பணம் இருக்கோல் லியோ? போய்ப் போட்டுக்கோ.

**டிரைவர்:** அது சரியாய்ப்போச்சு.

**எஜமான்:** சரியாய்ப் போச்சா? இருபது ரூபாய் கொடுத்தேனே?

**டிரைவர்:** ஒரு டியூப் வாங்கினேன். மிச்சம் ஒரு டின் ஆயில் வாங்கினேன்.

**எஜமான்:** சரி, சரி...போய் நம்ம "அக்கௌண்டிலே"யே போட்டுட்டுப்போ...சீக்கிரம் வரணும். போ...

**டிரைவர்:** சரிதானுங்க [போகிறுன்]

**எஜமானி:** டாக்டர் வரேன்னு சொன்னு வந்திடுவாரே?

**எஜமான்:** அதனுலே என்ன? போய் அழைச்சுட்டு வந்துடருன்...என்ன ஆகாரம் சாப்பிட்டே இன்னிக்கு?

**குமாஸ்தா:** எஜமான்....

**எஜமான்:** என்ன அது?

**குமாஸ்தா:** சந்தோஷ பாங்க் செக்ரட்டரி வந்திருக்கார்.

**எஜமான்:** எதுக்கு?

**குமாஸ்தா:** தெரியலே....ஒருவேளை நம்ம 'லோன்' விஷயமா யிருக்கும்னு தோணுது.

**எஜமான்:** அதுதான் தவணை முடிஞ்சு போகப் போகுதே?

**குமாஸ்தா:** அதுக்காகத்தான் இன்னும் எக்ஸ்டென்ஷன் கேட்டாங்க....இல்லேன்னு மேற்கொண்டு $1\frac{1}{2}$ லக்ஷமாவது லோன் கேக்கருங்க.

**எஜமான்:** மேற்கொண்டு கடனு? உன்கிட்ட அப்படிச் சொன்னுரா? ஏது, எனக்குத் தெரியாமயே வியாபாரம் செய்துடுவே போலிருக்கே?

**குமாஸ்தா:** இல்லிங்க எஜமான்....அவரு, செக்ரட்டரி பேச்சுப் பராக்கிலே அன்னிக்கி சொன்னுரு. நான் உங்க சொத்தைத் துன்னுட்டு உங்களுக்குத் துரோகம் செய்வேங்களா?

**எஜமான்:** நம்மகிட்டதான் இப்போ பணம் இல்லியே. எல்லாத்தையும்தான் தோட்டக் கம்பெனியிலே முடக்கியிருக்கமே?

**குமாஸ்தா:** நானும் அதைத்தான் சொன்னேன்?

**எஜமான்:** என்ன சொன்னே?

**குமாஸ்தா:** ஒன்றுமில்லே. இப்போ பேரரது கஷ்டம்னு சொன்னேன்.

**எஜமான்:** சரி, அவன் எங்கேயிருக்கான்?

**குமாஸ்தா:** ஆபீஸ் ரூமிலே.

போகிறார்—பூட்சு சப்தம்.

**எஜமானி:** அய்யோ, அப்பா!

**குமாஸ்தா:** உடம்பு எப்படியிருக்கு, அம்மா?

**எஜமானி:** எப்படியோ இருக்கு...உயிர் போகமாட்டேன் என்குது.

**குமாஸ்தா:** அப்படிச் சொல்லாதேயுங்கோ, அம்மா.

**எஜமானி:** அப்பா, அம்மா....குழந்தை கோபாலு அங்கேயிருந்தாக் கூட்டியாங்க....

**குமாஸ்தா:** கோபாலா? போயி வண்டியிலே வச்சுத் தள்ளிக்கிட்டுப் போறான். வெளியிலே பார்த்தேன்.

**எஜமானி:** போயிட்டானா? போயிடுவான்....“என்னவோ பணத்தை யெல்லாம் எங்கேயோ போட்டிருக்கேன் என்கிறீங்களே” அது என்ன?

**குமாஸ்தா:** அது பெரிய வியாபாரம் அம்மா....தோட்டக் கம்பெனி....பெரிய தேயிலைத் தோட்டம், காப்பித் தோட்டம் எல்லாம் எஸ்டேட். வருஷத்திலே ரொக்கமா 5 லக்ஷம் மிச்சமாகும், அம்மா.

**எஜமானி :** அதிலே, இன்னும் கூட்டு வேறே உண்டோ ?

**குமாஸ்தா :** ஆமாம், தொரை. அவருதான் இதை முடிச்சு வச்சாரு...அவருக்கு நாலுலே ஒரு பங்கு.

**எஜமானி :** என்னவோ எனக்கு விளங்கல்லே, இதெல்லாம்....முன்பின் தெரியாதவர்களை நம்பி இதிலே இறங்குவார்களா....எத்தனை தான் இதிலே மொத்தம் போட்டிருக்காக ?

**குமாஸ்தா :** மொத்தமா....வந்து.... [பூட்சு சத்தம்]

**எஜமான் :** என்னவோ, ஒரே அளப்பா அளக்கரான். பாங்கு ஷேர் மார்க்கெட்டிலே சீரழியுது.... ஏறி விக்கப்போகுதாம்....நீ ஏதாகிலும் சாப்பிட்டியோ ?

**எஜமானி :** அய்யோ....என்ன....

*டெலிபோன் மணி தூரத்தில் அலறுகிறது.*

**எஜமான் :** டேய்....போய்ப் பாரு....

*குமாஸ்தா போகிருன்—மணி நிற்கிறது*

**எஜமான் :** போனவனை இன்னும் காணேமே ?

**குமாஸ்தா :** டாக்டர்.

**எஜமான் :** வரேன்ஞரா ? நம்ம டிரைவர் இன்னும் போய்ச் சேரலியா ?

**குமாஸ்தா :** அவரு மாம்பலத்திலே யிருந்து பேசருரு. இதோ வந்துட்டேன்னு, சொன்ஞரு.

**எஜமான் :** இவன் வேறே அங்கேபோய்க் காத்துக் கிடப்பான்.

*மறுபடியும் டெலிபோன் அடிக்கிறது.*

**எஜமான்:** யார் அது? போய்ப்பாரு....

*டெலிபோன் மணி நிற்கிறது.*

**எஜமானி:** கொஞ்சம் காப்பி சாப்பிடுங்களேன்... இப்படி அலையிறிகளே....டே, ராமா....

**எஜமான்:** சும்மா இரு...நான் கூப்பிடறேன். ராமா... ராமா!...

**ராமன்:** இதோ வந்துவிட்டேன்.

**எஜமானி:** போய் எஜமானுக்குக் காப்பி கொண்டா...

**ராமன்:** இன்னும் பால்காரன் வரலே...

**எஜமானி:** போய் வேலைக்காரியை அனுப்பி வாங்கி வரச் சொல்லு (இருமல்) போ...சடுதியிலே வரணும்னு சொல்லு.

**ராமன்:** இதோ நொடியிலே

**எஜமானி:** மாசம் பாலுக்கு நாற்பது ரூபா கணக்காயிடுது, சமயத்திலே ஒரு சேர் கிடையாது...

**எஜமான்:** அப்படித்தான் நம்ம பிறந்தவேளை...

**எஜமானி:** பொறந்த வேளையாவது? ஏன், இப்படி ஒரு வேளை ஒக்காந்து சாப்பிடாதே அலையணும்? சேர்த்த பணமெல்லாம் பத்தாதோ? மலையாக் குமிக்கணுமாக்கும்?

**எஜமான்:** என்ன, பணத்துக்கா அலையறேம் இப்போ? சும்மா சோம்பேறியா உக்காந்திட்டிருந்தா பொழுது போகுமா?

**எஜமானி:** பொழுது போகாதே நிக்குதாக்கும்...

**எஜமான்:** எங்கே கோபாலு?

**எஜமானி:** போகுது...வவுத்துலே பொறந்த பிள்ளை நினைப்பாவது இருந்துதே? கட்டின பொண்டாட்டி நினைப்புத்தான் இல்லே...

**எஜமான்:** கோவிக்காதே லட்சுமி...இன்னும் ஒரு ரண்டு நாள் தான்...அப்புறம் வேலையே இல்லே. மொத்தம் நாற்பது லச்சம் இல்லே போட்டிருக்கு! நல்ல லாபம்.

*குமாஸ்தா வருகிறான்,*

**எஜமான்:** யாரு?

**குமாஸ்தா:** சந்திரசேகரய்யரு...

**எஜமான்:** எந்த சந்திரசேகரய்யரு?

**குமாஸ்தா:** பூலோக இன்ஷியூரன்ஸ் கம்பெனி...

**எஜமான்:** ஓஹோ, ஜட்ஜி அய்யர் மாப்பிள்ளையா? என்ன வேணுமாம்?

**குமாஸ்தா:** உங்களோடுதான் பேசணுமாம்.

**எஜமான்:** என்ன தொல்லே இது?

*எழுந்து போகிறார்—பூட்சு சத்தம்.*

**ராமன்:** அம்மா, காப்பி அம்மா...[ஆற்றும் சத்தம்]

**எஜமானி:** சூடா யிருக்கா?

**ராமன்:** குடிக்கிற பதமாயிருக்கு.

**எஜமானி:** சரி, சரி நல்ல சூடா, ஆத்தாதே கொண்டா, போ....ஜீனி கொறைச்சலாப் போடு.

**ராமன்:** சரிங்க.

*எஜமான் வருகிறார்—பூட்சு சத்தம்.*

**எஜமான்:** இங்கே சத்திரம் கட்டி வச்சிருக்காப்போலே பேசறாங்க.

**எஜமானி:** என்ன?

**எஜமான்:** என்னவோ அவருக்கு இன்ஷியூரன்ஸ் கம்பெனி பங்குகளை வாங்கணுமாம்.

**எஜமானி:** அப்படீன்னுக்க?

**எஜமான்:** அப்படீன்னுக்க, கம்பெனி திவாலாகப் போகுது. அதுக்கு இருபதினுயிரம் ரூபா கொடுத்தா நம்ம தலையிலே கட்டிப்புடுவாங்க.

**எஜமானி:** நல்லாயிருக்கு....இங்கே என்ன குமிச்சா வச்சிருக்கு?

**எஜமான்:** அவரு மாமா ஜட்ஜி, அவரு நமக்கு ரொம்ப சினேகிதம்....

**எஜமானி:** அதுக்காக? [டெலிபோன் மணி]

**எஜமான்:** இது ஏதுடா தொல்லை....டே! போய் யாரா யிருந்தாலும் நான் வீட்டிலே இல்லேன்னு சொல்லிப்பிடு...

**குமாஸ்தா:** சரிங்க.

**எஜமானி:** ராமா ....[இருமல்] அப்பா.

**எஜமான்:** நீ சும்மாயிரு. ராமா! ராமா!....

**ராமன்:** [உள்ளே] இதோ வந்துவிட்டேன்.

**கும்ஸ்தா:** தொரை கூப்பிடருரு.

**எஜமான்:** [அவசரமாக] இல்லேன்னுட்டியா?

**குமாஸ்தா:** பாக்கிறேன்னேன்.

**எஜமான்:** நல்ல வேளையாப்போச்சு.

எழுந்து அவசரமாகப் போகிருர்—பூட்சு சத்தம் வேகம்.

**எஜமானி:** அந்த ராமன் இன்னும் என்னதான் செய் வான்?

**குமாஸ்தா:** போய்க் கூப்பிடவா?

**எஜமானி:** வேண்டாம், வரட்டும் மூதேவி....வேலம் மாளை சித்தே கூப்பிடுங்களேன்.

**குமாஸ்தா:** கூப்பிடறேன் (போகிருன்.)

*எஜமான் வரும் சத்தம்.*

**எஜமான்:** *இவன் எங்கே போகிருன்?*

**எஜமானி:** *குமாஸ்தாவா? நான்தான் வேலேக்காரியைக் கூப்பிடச் சொன்னேன்?*

**எஜமான்:** *சரி, இந்த டாக்டரையும் காணும். அவரைக் கூப்பிடப்போன காரையும் காணுேமே.*

**எஜமானி:** *ஏன்? எங்கேயாச்சும் போகணுமா?*

**எஜமான்:** *ஆமாம், தொரையைப் பார்க்கப் போகணும்.*

*மோட்டார் வரும் சத்தம்—மோட்டார் சமீபத்தில் வந்து நிற்கிறது.*

**எஜமான்:** *யாரு? ஓஹோ....துரையே வந்துட்டாப் போலிருக்கே? நான் போறேன். கார் வந்தா கிளப்புக்கு வரச்சொல்லு. இவன் எங்கே? இவன் வந்தா பம்பாயிலேயிருந்து ஒரு டெலிபோன் வரும். இங்கேயே இருக்கச் சொல்லு.*

**எஜமானி:** *நான் சொல்றேன்...நீங்க போங்க....*

**எஜமான்:** *(சற்று தூரம்) டாக்டர் வந்தா நல்லாக்கேட்டு வச்சுக்கோ...*

**ராமன்:** *காபி, நல்ல சூடாயிருக்கு...*

**ஜமான்:—** *(தூரம்) வேணும், வேணும், போ.*

**எஜமானி:** *இதைச் சாப்பிட்டுத்தான் போங்களேன்.*

**எஜமான்:** *வேணும்...டாக்டர் வந்தா நீ என்ன சாப்பிடறதுன்னு நல்லா கேட்டு வச்சுக்க... டிரைவர் வந்தான்ஞ சாத்துக்குடி வாங்கியாரச் சொல்லு.*

*போகிருர்—பூட்சு சப்தம்.*

**குமாஸ்தா:** வேலைக்காரியைக் காணோம் அம்மா...

**எஜமானி:** சமயத்திலே தொலைஞ்சு போயிடுவா. சனியன். நீங்கதான் சித்தே ராமனைக் கூப்பிட்டு வென்னித்தண்ணி கொண்டாரச் சொல்லுங்களேன்.

**குமாஸ்தா:** சரிங்க. ராமா! (தூரத்தில்) ராமா! (போகிறான்)

**டிரைவர்:** (வந்து) எஜமான் இல்லிங்க?

**எஜமானி:** ஏன்? டாக்டர் வரலையா?

**டிரைவர்:** டாக்டர் இல்லீங்க....வீட்டிலே சொல்லி விட்டு வந்தேன். எஜமான் வெளியிலே போகணும்னுங்களே?

**எஜமானி:** போயிட்டாரு. உன்னைக் கிளப்புக்கு வரச் சொன்னாரு.

*டெலிபோன் மணி அடிக்கிறது.*

**எஜமானி:** அந்தக் குமாஸ்தாவைப் போய்ப் பார்க்கச் சொல்லு. அப்பா....அம்மா....ஒரு நிமிஷம் நிம்மதியாயிருக்க இடமில்லே. வீடு பெரிசாயிருக்கு.... பணம் இருந்து என்ன செய்ய?

*டெலிபோன் மணி நிற்கிறது.*

**குமாஸ்தா:** (அவசரமாக ஓடிவந்து) அம்மா, எசமான் எங்கே?

**எஜமானி:** ஏன்?

**குமாஸ்தா:** பம்பாயிலிருந்து டெலிபோன் வந்திருக்கு.... எங்கே போறேன்னு சொல்லிட்டுப்போனாரோ? அவரை இப்போப் பார்க்கணுமே?

**எஜமானி:** என்ன அது? சொல்லுங்களேன்?

குமாஸ்தா: முக்கியமான விஷயம். வியாபார விஷயம். அவரை உடனே பார்க்கணும்?

எஜமானி: கிளப்புக்குத்தான் வண்டியை வரச்சொன்னாரு. டிரைவர் போயிட்டானு பாரு?

குமாஸ்தா: போயிட்டானே? நான் சைக்கிளை எடுத்துக்கிட்டுப் போறேன்.

எஜமானி: என்ன அது, அவ்வளவு அவசரம்? சொல்லிட்டுப் போங்களேன்.

குமாஸ்தா: ஒண்ணுமில்லே, அம்மா. ஏதோ பொல்லாத காலம்னுதான் சொல்லணும்.

எஜமானி: என்ன? சும்மா சொல்லும். எங்கிட்டே சொன்னா என்ன?

குமாஸ்தா: எஜமான் கோபிப்பாரு அம்மா...

எஜமானி: கோபிக்கமாட்டாரு. சும்மா சொல்லும்.

குமாஸதா: பம்பாயிலே ஷேர் மார்க்கெட்டிலே பணம் ஏராளமாப் போட்டிருந்தாரு.

எஜமானி: அது என்ன? அப்படி ஒரு வியாபாரமா?

குமாஸ்தா: ஆமாம் அம்மா...சூதாட்டம் மாதிரி. வந்தா ஒரேயடியா வரும். போனாலும் ஒரேயடியா முழுகிடும்.

எஜமானி: எவ்வளவு ரூபா?

குமாஸ்தா: ரொம்ப...இருபது லக்ஷத்துக்கு மேலே...

எஜமானி: எல்லாம் போச்சா?

குமாஸ்தா: போனமாதிரிதான்...இதை நம்பித்தான் தோட்டக் கம்பெனிகூட ஆரம்பிச்சாரு அம்மா...

எஜமானி: இப்போ அதுவும் போச்சா?

குமாஸ்தா: ரொக்கம் இல்லாதே தொரை மசியமாட்டாரு.

**எஜமானி:** சனி தொலைஞ்சுது. (மோட்டார் சத்தம்)

**குமாஸ்தா:** நம்ம வண்டிதான்...அம்மா. எஜமான் கிட்ட நான் சொன்னதா சொல்லாதிங்க.

**எஜமானி:** நான் அதெல்லாம் சொல்லமாட்டேன்- பயப்படாதிங்க.

**டிரைவர்:** எஜமான் வரலீங்களா?

**எஜமானி:** (பீதியுடன்) கிளப்பிலே இல்லையா?

**டிரைவர்:** இல்லிங்களே?

**குமாஸ்தர்:** ஆபீசிலே பார்த்தியா?

**டிரைவர்:** அங்கேயிருந்துதானே வரேன். மானேஜர் அய்யாதான் எஜமானை அவசரமாய்ப் பார்க்கணும்னு சொன்னாரு.

**எஜமானி:** எங்கே போயிருப்பாக?

**குமாஸ்தா:** நான் போன் பண்ணிப் பார்க்கிறேன்.

**எஜமானி:** கிளப்பிலே வந்தாங்களான்னு விசாரிச்சியா?

**டிரைவர்:** விசாரிச்சேன். தொரையோடே பேசிக்கிட்டு இருந்தாங்களாம். ஏதோ தந்தி வந்துச்சாம். உடனே கிளம்பிட்டாங்களாம்.

**எஜமானி:** தொரைகூடவே போனாங்களான்னு கேட்டியா?

**டிரைவர்:** அது கேட்டேன். இரண்டுபேரும் எழுந்திருச்சுப் போனாங்களாம். சேந்தே போனாங்களான்னு தெரியலிங்க.

**எஜமானி:** இதுக்கு என்ன செய்யறது? கவலையாயிருக்கே?

**குமாஸ்தா:** (மெதுவாக) ஒரு இடத்திலும் இல்லிங்க.

**எஜமானி:** தொரை வீட்டிலே கேட்டியளா?

**குமாஸ்தா:** *கேட்டேன். ளிப்பிலேயிருந்து அவசர மாக வெளியிலே போஞராம்.*

**எஜமானி:** *என்னமோ தந்தி வந்துதாமே?*

**குமாஸ்தா:** *தொரையும் சொன்ஞன். இதுவாத்தான் இருக்கும்.*

**எஜமானி:** *நல்லபடியா வீடுவந்து சேரணுமே? இந்தக் காமாக்ஷியம்மன்தான் காப்பாத்தணும்.*

**குமாஸ்தா:** *நீங்க கவலைப்படாதிய, அம்மா...நான் போய் எங்கேயிருந்தாலும் தேடி அழைச்சுக் கிட்டு வந்துடறேன்...வா, அப்பா டிரைவர்.*

*போகிருர்கள்—மோட்டாா புறப்படும் சப்தம்.*

**ராமன்:** *வென்னித் தண்ணி அம்மா...*

**எஜமானி:** *வென்னீரைக்கொண்டே வெளியிலே ஊத்து.*

**ராமன்:** *ஏன் அம்மா கோபம்? அடுப்பிலே பதார்த்தம் வெந்துக்கிட்டிருந்தது. அதை இறக்கிட்டுச் சுட வச்சேன்.*

**எஜமானி:** *சரி, சரி, போ...*

**ராமன்:** *அம்மா கோபிக்குதே.*

**எஜமானி:** *கோபிக்கலே போ...போய் பிள்ளையைத் தேடி அழைச்சுக்கிட்டு வா...*

**ராமன்:** *சரிங்க (போகிருன்)*

**எஜமானி:** *கடவுளே...நீதான் காப்பாத்தணும்.*

*மெதுவாக பூட்சு சப்தம் கேட்கிறது. எஜமான் வருகிருர். உட்காருகிருர்.*

**எஜமானி:** *எங்கே போயிருந்திய? (மௌனம்)...நம்ம கார் உங்களைத் தேடி வந்துச்சே? (மௌனம்)*

என்ன இப்படி உக்காந்திட்டியேளே...என்ன அது ?

**எஜமான்:** (மெதுவாக) ஒண்ணுமில்லே—லட்சுமி...

**எஜமானி:** என்ன ஆச்சு ? இப்படியிருக்கியளே?

**எஜமான்:** ஒண்ணுமில்லே...நீ கஷ்டப்படாதே. உன்னைக் கவக்கானிக்காமே போனேன். அதுக்குத் தகுந்த தண்டனை தான் இது.

**எஜமானி:** என்ன இது! பணம் போனாப் போகட்டுமே? இப்படி சோரலாமா?

**எஜமான்:** இல்லே லட்சுமி. உனக்குத் தெரியாது... என் நம்பிக்கையெல்லாம் போச்சு.

**எஜமானி:** எனக்குத் தெரியும். அத்தனை பணமும் போனாக்கூட கவலைப்படலாமோ? எல்லாம் நீங்க சம்பாரித்ததுதானே? இன்னொருவாட்டி சம்பாதிச்சுக்கலாம். இதுக்கா இப்படிக் கவலைப் படுறிய?

**எஜமான்:** எவ்வளவு பணம்...உம்...

**எஜமானி:** சனி, தொலைஞ்சுதுன்னு தலையை முழுகிட்டு வாங்க. இதோ காப்பி கொண்டாரச் சொல்றேன். அடே ராமா!...ராமா!...ஜல்தியா காப்பி கொண்டா! நல்ல சூடாயிருக்கட்டும். ஜீனி குறையப் போடு.

*சங்கீதம்—சோகரஸமான சங்கீதம் ஆரம்பித்து, சிறிது போனதும் விஷ்ணுவும் லக்ஷ்மியும் பேசுகிறார்கள். அவர்கள் பேசி முடித்ததும் சங்கீதம் அதிகரிக்கிறது. அவர்கள் பேசிக் கொண்டிருக்கையில் பின்னணியில் கேட்கிறது.*

**விஷ்ணு:** இதுதான் தனம் மிகுந்தவரின் வாழ்க்கை. இதில் சந்தோஷம் எங்கே?

**லக்ஷ்மி:** *மனிதர்கள் ஒரு விசித்திரப் பிறவிகள்தான். இல்லாத பொருளுக்காக ஏங்குவது, அது கிடைத்த பின்பும், நிம்மதி ஏற்படுவதில்லையென்றால் ஆச்சரியந்தானே?*

**விஷ்ணு:** *அதிசயம்தான். இதோ பார். செல்வம் மிகுந்தவன் எப்படிக் கஷ்டப்படுகிறானோ அப்படியே அது இல்லாதவனும் கஷ்டப்படுகிறான்...*

*சங்கீதம் அதிகரித்து நிற்கிறது—பட்சிகள் சப்தம் கூடவே தூரத்தில் நாய் குரைக்கும் சத்தம்—கோழிகள் கொக்கரிக்கும் சப்தம்.*

**பையன்:** *அம்மா, அம்மா.*

**தாயார்:** *(தூரத்தில்) ஏன்டாப்பா (சமீபம்) என்னடாப்பா? என்ன செய்யுது ?*

**பையன்:** *கண்ணை இருட்டுது அம்மா.*

**தாயார்:** *கொஞ்சம் இரு, அப்பா...இதோ நாய்னு வந்துடுவாரு. கஞ்சி காய்ச்சித் தாரேன்.*

**பையன்:** *அம்மா, அம்மா, மண்டை யிடிக்குது அம்மா?*

**தாயார்:** *அந்தப் பாழாப்போன வைத்தியக்காரனையும் காணோம். இரு அப்பா...கொஞ்சம் சுண்ணாம்பு தடவுறேன்.*

**பையன்:** *மொள்ள அம்மா...*

**தாயார்:** *உடம்பு கொதிக்குதே? அந்தக் காளியாயி தான் காப்பாத்தணும்.*

**கிழவி:** *வீரம்மா?*

**தாயார்:** *வாங்க பெரியாயி...*

**கிழவி:** *உன் புள்ளைக்கு உடம்பு எம்படியடி இருக்கு?*

**தாயார்:** *தணலாக் கொதிக்குது.*

**கிழவி:** *வைத்தியக்காரன் என்ன சொன்னான்?*

**தாயார்:** *மருந்துக்குக் கால் ரூபா புடிக்குமின்னுன். பால் கஞ்சி கொடுக்கணுமாம். நான் பாலுக்கு எங்கே போவேன் பெரியாயி?*

**கிழவி:** *உன் புருசன் எங்கே?*

**தாயார்:** *எங்கியாவது போயி காலிலே விளுந்து கால் ரூபா வாங்கியாரேன்னு போச்சு.*

**கிழவி:** *அய்யோ பாவம். நல்லாக் கொதிக்குது. காளியாயி மனசுவச்சா ஒண்ணுமே வாணும். தானே காத்தாலே எழுந்திருச்சுடுவான்.*

**தாயார்:** *எங்கே பெரியாயி...*

**கிழவி:** *இல்லேம்மா, போயிட்டு வாரேன். வீட்டுலே வயசுவந்த புள்ளேயை ஒண்டியா வச்சுட்டு வந்தேன். (தூரத்தில்) புள்ளே கிட்டேயே யிரு.*

**பையன்:** *அம்மா.*

**தாயார்:** *ஏண்டாப்பா?*

**பையன்:** *காளியாயி மனசுவுச்சா மருந்தே இல்லாதே சரியாய்ப்போயிடுமா அம்மா?*

**தாயார்:** *ஆயிடும் அப்பா...இரு...அதோ நாயிஞ...*

**நாய்ஞ:** *(ரகஸ்யமா) வீரம்மா...*

**தாயார்:** *பணம் கெடச்சுச்சா ?*

**நாய்ஞ:** *(ரகஸ்) சத்தம் போடாதே. இதோ ...*

**தாயார்:** *(ரகஸ்) அய்யோ? வெள்ளிக்கிண்ணியா?*

**நாய்ஞ:** *ஆமாம்.*

**தாயார்:** *ஏது ? திருடினியா?*

**நாய்ஞ:** *உஸ்! பேசாமே கொண்டுபோய் செட்டி கடையிலே கொடுத்து ரூபா வாங்கியா!*

**தாயார்:** *அய்யய்யோ, பாவி. தெரிஞ்சா விட்டுடுவாங்களா?*

**நாயுடு:** ஏன் தெரியுது? சத்தம்போடாதே....

**தாயார்:** ஊஹூம், நான் மாட்டேன். காளியாயி கண்ணைப் புடுங்கிடுவா.

*டொக்கென்று சத்தம் கேட்கிறது.*

**நாயுடு:** அடே! பைத்தியமாயிருக்கியே. கால் ரூபா இல்லேன்னு புள்ளை செத்தாத் தேவலையா?

**தாயார்:** ஊரார் சொத்தைத் திருடி ஜெயிலுக்குப் போகவா?

**நாயுடு:** வேறே என்ன செய்யறது? எல்லாரையும் போய்க் கேட்டுப் பார்த்துட்டேன். காலணாக் கூட இல்லேன்னுட்டாங்க...

*தடதடவென்று கதவு தட்டும் சத்தம்.*

**போலீஸ் குரல்:** ராமசாமி, ராமசாமி...

**நாயுடு:** அய்யய்யோ, போலீஸ்காரன்.

**தாயார்:** என்ன செய்யறது....

**நாயுடு:** அதை மறைச்சு வை....

*உள்ளே இரு போலீஸ்காரர் நுழையும் சத்தம்.*

**போலீஸ்:** ஓஹோ, சாமானை மறைக்கப் பார்க்கிறியோ?

**தாயார்:** அய்யய்யோ! ஒன்றும் இல்லிங்க.

**போலீஸ்:** இங்கே கொண்டா இப்படி....டே....அவனைப் படி.

**தாயார்:** அவரு எடுக்கலிங்க. நான்தான் எடுத்தேனுங்க.

**போலீஸ்:** சரி, சரி, நீ போ எட்டி.

**தாயார்:** அவரை விட்டுடுங்களேன். நான் உள்ளதைச் சொல்லிடறேன். புள்ளே காயலாக் கிடக்குங்க. கால் ரூபா இல்லாமே சாகுதுங்க, எசமான் மன்னிச்சு விட்டுடுங்க.

**நாய்னு:** நீ சும்மா இரு....நான்தான் அய்யா எடுத்தேன். என் புள்ளேக்கு உயிரு புழைக்க யாரும் கால் ரூபா குடுக்கமாட்டேன்னுங்க.

**போலீஸ்:** டே, அங்கே வந்து உங்க பார்ட்டன்கிட்டே எல்லாம் சொல்லு. உங்க அப்பன் வீட்டு சொத்தோ?....நட....

**நாய்னு:** அடிக்காதே அய்யா, வரேன். (தூரம்)

**தாயார்:** அய்யோ, காளியாயி! நான் என்ன செய்வேன்!

*சங்கீதம்—சந்தோஷத்தைக் காட்டும் துரிதமான சங்கீதம்.*

**விஷ்ணு:** இதோ பார், உன்னுடைய மருமகள் வாணியின் அனுக்ரஹம் உள்ள இடம்.

**லக்ஷ்மி:** இங்கே சந்தோஷம் இருக்கிறதா?

**விஷ்ணு:** நீயே பாரேன்.

*சங்கீதம் நிற்கிறது.—ஒற்றை வாத்தியம் — வீணை மட்டும் சிறிது கேட்டு நிற்கிறது.*

**கவி:** (படிக்கிறான்)

> வானகம் கறுத்தது வையகம் இருண்டது
> மேகமும் மேகமும் மோதி உருண்டன.
> அதிர்ந்தது விண்ணும் மண்ணும்
> அன்னையின் மடியில்
> ஓடி ஒளிந்தனர் குழந்தைகள்
> ஏங்கிய மாந்தர்

சோகம்
நீங்கி நிமிர்ந்து நின்றனர்.
வீங்கியது அவர் உள்ளம்
ஆசையால்,
வையகம் களிக்க வானகம் உவக்க
வந்தது மழை
வந்தது மழை
வள்ளல் கைத்தனம்போல் வழங்கு
அன்னை கை அமுதைப்போல்
பெய்தது மழை
பெய்தது மழை
நின்று பெய்ததே.

**மனைவி:** என்ன ? நான் கூப்பிடுகிறது காது கேட்க லையா?

**கவி:** என்ன?

**மனைவி:** என்னவா? இப்படியே பாட்டுப் பாடிக் கொண்டே உட்கார்ந்திருந்தால் என்ன செய்கிறது ? (மௌனம்) பால்காரன் இன்னிக்குக் கொடுக்காவிட்டா விடவேமாட்டேன்னு போயிருக்கான். அவன் கிட்டே இந்தப் பாட்டைப் பாடுங்கோ.

**கவி:** அவனுக்கு இதன் அருமை தெரியாது. இதோ பார். எவ்வளவு அழகாய் வந்திருக்கு? வானகம் கறுத்தது. வையகம் இருண்டது. மேகமும் மேகமும் மோதி உருண்டன.

**மனைவி:** போதுமே உங்க பாட்டு. நாலு மாசமா வீட்டு வாடகை கொடுக்கலே....ஸ்டோர்க்காரன் மென்னியைப் பிடிக்கிறான். பாட்டுப் பாடறி

களாம் பாட்டு. அதைக் கொண்டுபோய் அடுப்பிலே போடறேன்.

**கவி:** சரஸு, அப்படிச் சொல்லாதே. அபசாரம்.

**மனைவி:** காலணு வரும்படி யில்லாதே என்னத்துக்கு, இந்தப் பாட்டும் கூத்தும்?

**கவி:** சரஸு, கவிதைக்குப் பணம்கொடுத்து ஈடு செய்ய முடியுமா? இது குறையாத தனம்.

**மனைவி:** வீட்டுக்கார செட்டி கிட்ட பாட்டைக் கொடுத்தா பேசாமே போயிடுவாறு?

**கவி:** நம்முடைய தினசரிப் பிடுங்கல்கள் நாளைக்கு மறைந்துவிடும். இந்தச் கவிதையின் கீர்த்தி என்றென்றும் மறையாது. நித்தியானது. நீ இதைக் கேளு.

**மனைவி:** நான் கேட்டு என்ன செய்கிறது? வேறு யாரும் உங்கள் கவிதையை ஒப்புக்கொள்ளலையே?

**கவி:** இந்த உலகம் பைத்தியக்கார உலகம். கண்ணெதிரே இருக்கும் மேதையை அறிய அதற்குச் சக்தியில்லை.

**வேலைக்காரி:** (தூரத்தில்) அம்மா, அம்மா.

**மனைவி:** இதோ சம்பளத்துக்கு வந்துவிட்டாள்.

**கவி:** சட்டைப்பையில் நாலணுக் கிடந்தது, எடுத்துக் கொடு.

கதவு தட்டும் சத்தம்

**கவி:** யாரது?

**குரல்:** கவி ராமயோகி இங்கேதானே இருக்கிறுர்?

**கவி:** ஆம், வாருங்கள்.

காலடிச் சத்தம்.

**கவி:** தாங்கள் யாரென்று தெரியவில்லையே ?

**வந்தவர்:** பண்டிதமணி காவ்யகேசரி சதாவதானி சஞ்சீவி ராயர் என்று கேள்விப்பட்டதுண்டா ?

**கவி:** கேள்விப்பட்டதுண்டு. சந்தோஷம். ஏது இவ்வளவு தூரம் ?

**சஞ்சீவி:** உம்மைப் பார்த்துப் பேசவேண்டும் என்றுதான் வந்தேன். நீர் கவி எழுதுவதாகக் கேள்விப்பட்டேன்.

**கவி:** அப்படியா ?

**சஞ்சீவி:** இரண்டொன்று பார்வையிட்டேன் நீர் யாரிடத்தில் பாடம் கேட்டதோ ?

**கவி:** நான் யாரிடமும் பாடம் கேட்கவில்லை. சுயமாகப் படித்ததுதான்.

**சஞ்சீவி:** அப்போது ஆச்சரியமில்லை.

**கவி:** என்ன?

**சஞ்சீவி:** உம்முடைய கவிகளில் யாதொரு கவிதா லக்ஷணமும் காணப்படாததுதான்.

**கவி:** அப்படியென்றால் ?

**சஞ்சீவி:** யதுகை, சீர், தளையை மறந்து சித்தம்போக்கு சிவம்போக்காக....

**கவி:** நான் இலக்கணம் படிக்கவில்லை.

**சஞ்சீவி:** இலக்கணமின்றி இலக்கியமேது ?

**கவி:** மன்னிக்கவேண்டும். இலக்கியத்துக்குத்தான் இலக்கணமேயன்றி, இலக்கணத்துக்காக இலக்கியம் அல்ல என்பது என் அபிப்பிராயம்.

**சஞ்சீவி:** நன்று, நன்று, உம்முடைய பாட்டைக் கவிதையென்று சொல்லாதேயும். வேறு ஏதாவது பெயர் கொடும்.

**கவி:** நான் ஒன்றும் சொல்லவில்லையே? எனக்குத் தெரிந்ததை எழுதுகிறேன். உங்களைப்படிக்க வேண்டுமென்று கட்டாயப்படுத்தவில்லை. நீர் வேண்டுமானுல் கவிதை என்று சொல்ல வேண்டாம்.

**சஞ்சீவி:** ஐயா, நீர் செய்வது பெரிய அபசாரம். இந்தத் தூய தமிழானது, இந்தப் பண்டைத் தமிழ், பைந்தமிழானது, முக்கண்ணனுன பரமசிவனுல் ஆக்கப்பட்டது. அதனுல் அன்ருே, தமிழ் மொழியை, இசைத்தமிழ், இயல் தமிழ், நாடகத் தமிழ் என்று முப்பிரிவாகப் பிரித்திருக்கிருர்கள். அதை நீர் கொலை செய்கிறீர். அதைச் சொல்லவே நான் வந்தேன்.

என்று படபடவென்று எழுந்து போகிருர்

**மனைவி:** இது யார்?

**கவி:** இது ஒரு பத்தாம் பசலிப் பண்டிதர்.

**மனைவி:** உங்கள் பாட்டு நன்ருயில்லை என்கிருரா?

**கவி:** அவனுக்குத் தெரிந்தது அவ்வளவுதான்.

**மனைவி:** ஏன், அவர் சொன்னதும் சரியாய்த்தானே இருந்தது?

**கவி:** என்ன? அகராதியை வைத்துக்கொண்டு கவி கட்டினுல் அது கவிதையாகுமா? கவிதைக்கு வேண்டியது உணர்ச்சி, தெளிவு இரண்டும் தான். பாஷையும் நடையும் எப்போதும் மாறிக் கொண்டேதான் வருகிறது. கம்பனுடைய கவியை அந்தக் காலத்துப் பண்டிதர்கள் ஒப்புக் கொள்ளவில்லை. இன்று?

**மனைவி:** கம்பனும் இப்படித்தான் கஷ்டப்பட்டிருப் பான்!

**கவி:** அதில் சந்தேகம் என்ன ?

**குரல்:** ஸார் போஸ்ட் !

*மனைவி போகும் சத்தம்*

**மனைவி:** இதோ பாருங்கள். உங்களுக்கு உதயகன்னி ஆசிரியரிடமிருந்து ஒரு கடிதம் வந்திருக்கிறது.

**கவி:** எங்கே ?

**மனைவி:** நான் படிக்கிறேன்.

"புதுமைக் கவி ராமயோகி அவர்களுக்கு, உங்களுடைய 'அன்பு' என்ற கவிதையைப் படித்ததும் மெய்மறந்தேன். இவ்வளவு தெளிவும், சுவையும் நிறைந்த கவிதையைச் சமீப காலத்தில் படித்ததேயில்லை. உங்களைப போன்ற கவிகள் நூறுவருஷங்களுக்கு ஒரு முறைதான் தோன்றுவார்கள். இன்னும் இதைப்போன்ற கவிதைகள் எவ்வளவு இருந்தாலும் பிரசுரிக்கத் தயாராயிருக்கிறோம் உங்களுக்குக் கடவுள் நீண்ட ஆயுளை அருளவேண்டும் !"

**மனைவி:** அது என்ன கவிதை? நான் படிக்கவில்லையே?

**கவி:** இதோ படிக்கிறேன் கேள்.

அன்பென்பது அதிசயமானது.
ஆனினம் கன்றைத்தேடி அலறும் தொனியிலும்
பாவினம் படிக்கும் கவியின் நாவிலும்
அன்புண்டு.
கூலிப் பெண்கள் கூடி யிடிக்கும் சோவெனும் ஒலியினிலும்
மாலை மயங்கும் நேரமதில் இளம் கோவலர் இசைக்கும்
குழல் ஓசையிலும்
அன்புண்டு.

வெற்றிவீரன் கை வேல் நுனியிலும்
மதனை வெற்றிகொண்ட
மாதரார் கடை விழியிலும்
காளையர் வலிவில்
நாரியர் மெலிவில்
அன்புண்டு
அன்பென்பது அதிசயமானது.

**மனைவி:** நன்றாயிருக்கிறதே! இன்னும் எவ்வளவு இருந்தாலும் இப்படியே கேட்டுக்கொண்டிருக்கலாம் போலிருக்கிறதே!

**கவி:** உன்னுடைய புன்னகை நிலவொளி வீசும் முகம் என் எதிரில் உள்ள வரையில் எவ்வளவு கவிதை வேண்டுமானாலும் எழுதித் தள்ளுவேன். இங்கே வா.

சந்தோஷமான சங்கீதம்.



# முல்லைக்கொடி

| | |
|---|---|
| மங்களகன் | சிந்தாமணி |
| சாத்தனுர் | அருணை |
| பூசாரி | குரல்கள் |
| கேசி | அறிவிப்பாளர் |

**குரல்:** முல்லைக்கொடியா? அது, என்ன அது?

**அறிவிப்பாளர்:** போய்ப் பார்த்தால் தெரிகிறது.

**குரல்:** எங்கே?

**அறிவி:** அதோ, எதிரில் நடக்கிறதே நாடகம்.

**குரல்:** அது ஒரு நாடகமா? பெயரைக் கேட்டால் நூதனமாக இருக்கிறது.

**அறிவி:** ரொம்பப் பழமையான நாடகம்.

**குரல்:** அப்படியா?

**அறிவி:** பழந்தமிழர் வாழ்க்கையைப்பற்றிய நாடகம் ஆனுல் சுவை நிறைந்தது.

**குரல்:** என்ன கதையோ?

**அறிவி:** பழந்தமிழர் இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்பே நாகரிகத்தில் முதிர்ந்திருந்தனர். அவர்களுடைய வாழ்க்கையில் போரும் காதலும் ஒன்றுடன் ஒன்று பின்னிக்கிடந்தன...விருக்ஷங்களில் சிறந்த அரசைச் சுற்றி முல்லைக்கொடியானது பின்னிப் படர்ந்திருப்பதைப்போல்...

கூட்டத்தின் சப்தம்

**குரல்:** இவ்வளவு ஜனங்களும் நாடகத்துக்கா போகிருர்கள்?

**அறிவி:** ஆமாம்.

**குரல்:** நாமும் போவோமே.

**அறிவி:** சீக்கிரம் போவோம். (நிசப்தம்)

*'கிணு கிணு' வென்று சிறு மணியின் ஓசை கேட்கிறது. ஓசை நின்றதும் வீணை நாதம், தானம்—சங்கீதம் பின்னணியில் ஒலித்துப் பேச்சு ஆரம்பமானதும் நிற்கிறது.—ஆற்று நீர் சப்தம்—குடங்கள் தேய்க்கப்படும் சப்தம் - தண்ணீரில் துளையும் சப்தம்*

**பெண் 1:** அந்தக் கேசி மகள், சிந்தாமணிக்கு என்னவோ உடம்பு சரியா யில்லையாமே?

**பெண் 2:** ஆமாம், உடம்பு சரியாயில்லைதான். ஊரில் இல்லாத வைத்தியமெல்லாம் பார்க்கிறுள்.

**பெண் 1:** என்ன உடம்பு?

**பெண் 3:** தெரியாதா உனக்கு? மனோவியாதி...

**பெண் 1:** இந்த வயதில் என்ன கவலை வந்தது அவளுக்கு?

**பெண் 3:** கவலையெல்லாம் இந்த வயதில் வராமல் வேறு எப்போது வரும்? வயதுக்கு எட்டாத எண்ணமெல்லாம் வர பருவந்தானே இது?

**பெண் 2:** அவள் எண்ணமெல்லாம் சரியாத்தான் இருக்கு. கேசி என்னவோ ஊரிலே இருக்கிற மந்திரவாதிகளையெல்லாம் கூப்பிட்டு மந்திரிக்கச்சொல்ரு. பைத்தியம்.

**பெண் 1:** சங்கா தோஷமா?

**பெண் 3:** இல்லையடி! மன்னவனுக்குத்தான் மாலையிடப் போகிறுளாம். அதே பைத்தியமாப் போச்சு.

**பெண் 3:** ஓ ஹோ...

**பெண் 2:** பின்னே வேறே என்ன? நானாயிருந்தால் காலையும், கையையும் கட்டிப்போட்டு, உள்ளே போட்டுப் பூட்டுவேன். பாவம், கேசி ஒண்ணும் தெரியாதவள்.

**பெண் 1:** ஆமாம் அந்தப் பெண்ணுக்குத்தான் மாலையூர் மங்களகனைப் பேசியிருந்ததாமே.

**பெண் 2:** ஆமாம். பேசுவதென்ன? தேதிகூட வைத்திருந்தார்கள். அதற்குள்ளே ஈழநாட்டுப் போருக்குக் கிளம்பிவிட்டான் பிள்ளை.

**பெண் 1:** அதுவரையில் பொறுக்கவில்லையாக்கும் அம்மாளுக்கு?

**பெண் 3:** சென்னி வளவன் பவனி வந்தானும், அவனைக் கண்டுவிட்டாளாம். அன்று முதல் பிடித்தது சனியன்.

**பெண் 1:** (மெதுவாக) அதோ வந்துவிட்டாள் சிந்தாமணி.

**பெண் 2:** நமக்கேன் வம்பு? துணி கிடக்கு ஒரு அம்பாரம்.

*துணி துவைக்கும் சத்தம்—காட்சிமாற்றம் சங்கீதம்—கேசி வீடு—உடுக்கடிக்கும் சத்தம்—பூஜைமணி அடிக்கும் சத்தம்.*

**பூசாரி:** அன்னை பராசத்தி வா வா
என் நாவினில் நின்று நர்த்தனம் செய்வாய்
மின்னைப் பழித்த செம்மேனி உடையாய்
சின்னக் குழந்தைஎன் சேவையை ஏற்பாய்—
அன்னை பராசக்தி

*பாட்டுக்குப் பின்னணியில் உடுக்கு சத்தம் மெதுவாகக் கேட்கிறது.*

**கேசி:** தாயே, அம்பிகே, மகாகாளி, குழந்தையை நீதான் காப்பாத்தணும். உனக்கு என்ன வேணுமோ செய்கிறேன்.

**பூசாரி:** பதருதே உன் பிள்ளை பிழைக்கும்.
காராட்டு உதிரம் பெருக்கி, களன் செய்து,
உன் பொண்ணுக்கு நீராட்டுச் செய்யணும்.

**கேசி:** அப்படியே செய்யறேன், தாயே.

**பூசாரி:** கவலைப்படாதே காப்பது நான்.
செவலைக்குளத்து முனியன் பிடித்தான் அவளை
அவன் எட்டாத உயரம்—ஏருதமலை உச்சி
அவனைத் திவலைத் துளி நீராய்ச் சிதறச் செய்
வேன்

*உடுக்கு வேகமாகக் கேட்டு நிற்கிறது. அருணை வருகிருள்.*

**கேசி:** என்னடி அருணு, உன் தோழி எங்கே?

**அருணை:** ஏன், குளிக்கப்போனுள்.

**கேசி:** சமயத்தில் எங்கேயாவது போய்விடுவாள்.

**அருணை:** இதெல்லாம் என்ன?

**கேசி:** எல்லாம் அவளுக்குத்தான். அம்பிகை வாக்குக் கொடுத்துவிட்டாள். அவள் பைத்தியம் தீர்ந்து விடும்.

**அருணை:** ஊம், உங்களுக்குப் பணச்செலவு, பூசாரிக்கு வாய்ச் செலவு, அவ்வளவுதான்.

**கேசு:** ஏன்?

**அருணை:** என்ன கேசியம்மா, சிந்தாமணியைப் பிடித்த முனி இந்தப் பூசாரிக்கெல்லாம் மசியுமா?

**கேசு:** பின் யாருக்கு மசியும் என்கிருய்?

**அருணா:** யானைமேல் அம்பாரி வைத்து, அதற்குமேல் குடை நிழலில் வருகிறாரே, அந்தப் பூசாரிக்குத் தான் மசியும்.

**கேசி:** என்ன ?

**அருணா:** தெரியலையா ? ஆமாம், அம்மா.

**கேசி:** உனக்கும் பிடித்துவிட்டதா பைத்தியம் ?

**அருணா:** நல்ல வேளையாக எனக்கு இன்னும் பிடிக்க வில்லை, அந்தப் பைத்தியம்.

**கேசி:** அடி அருணா, என் மகளைக் கெடுத்தது நீ தான். இல்லாவிட்டால் இந்தப் புத்தி அவளுக்கு வராது. குழந்தை அன்ன ஆகாரமின்றி நிழலாய்ப்போய் விட்டாள். நித்திரையின்றி இரா முழுவதும் பிதற்றுகிறாள்.

**அருணா:** உங்க மகள் என்ன பச்சைக் குழந்தையா ? நான் ஏன் கெடுக்கிறேன் ?

**கேசி:** நீ வருவதற்கு முந்தி அவள் நன்றாய்த்தான் இருந்தாள். அப்போது பண்ணிப்போட்டேன் வளையல். இப்போது கை நழுவிக் கழண்டு விழு கிறது.

**அருணா:** அம்மா, உங்க பெண்ணை நான் கெடுக்க வில்லை. இதோ வருகிறாள். நீங்களே பார்த்துக் கொள்ளுங்கள். ஆனால் அவளுக்கு வைத்தியம் செய்யுமுன் நீங்கள் பூசாரியிடம் வைத்தியம் செய்து கொள்ளுங்கள். சித்தம் சரியாக ஆகும்.

*போகிறாள். விருவிரென்று போகும் சப்தம்—சிந்தாமணி வருகிறாள்—நிசப்தம்.*

**கேசி:** வாடியம்மா, பூசாரியிடம் விபூதி வாங்கிக் கொள்.

**சிந்தா:** எதற்கு அம்மா ?

**கேசி:** நல்லதுதான் வாங்கிப் பூசிக்கொள்.

**பூசாரி:** அது வாங்கவிடாது அம்மா.

**சிந்தா:** எனக்கு ஒன்றுமில்லை அம்மா.

**கேசி:** கண்ணே வாங்கிக்கொள் அம்மா. அம்பிகை பிரசாதம். உடம்பு நேராகும்.

**சிந்தா:** எனக்கு உடம்பு ஒன்றுமில்லை யம்மா?

**பூசாரி:** அது வாங்கவொட்டாதே. குழந்தையா பேசுது.

**கேசி:** கையை நீட்டம்மா ?

**சிந்தா:** கையை விடம்மா. எனக்கு விபூதியும் வேண்டாம். ஒன்றும் வேண்டாம்.

**பூசாரி:** நான்தான் சொல்லலே, அது பொல்லாத கழுதையாச்சே ?

**சிந்தா:** போதும், நீர் ஒன்றும் சொல்லவேண்டாம். எழுந்திருந்து போம்.

**பூசாரி:** இந்தா ! எங்கிட்ட வராதே.

**சிந்தா:** எழுந்திருந்து போகிறீரா, உம்முடைய பரிவாரங்களையெல்லாம் வெளியிலே தூக்கிப் போடவா ?

**கேசி:** ஐயையோ சிந்தாமணி, சும்மா இரும்மா. வேண்டாம். அபராதம், தாயே, காப்பாற்று.

**சிந்தா:** எழுந்து போகிறீரா, இல்லையா ? உம் .... எழும், நடவும்.

*சாமான் தூக்கும் சத்தம்—மணி முதலியவை.*

**பூசாரி:** (தூரத்தில்) இன்னிக்கிப் போறேன். ஏ முனியே, உன்னை நான் ஒரு கை பார்க்கிறேன் வா.

*நிசப்தம்.*

**கேசி:** அம்மா சிந்தாமணி, இப்படி அபராதம் செய்துட்டாயே? அம்பிகை பொறுப்பாளா?

**சிந்தா:** பொறுக்காவிட்டால் போகட்டும். தொண தொணவென்று பேசி என் உயிரை வாங்காதே.

**கேசி:** நான் உயிரை வாங்குகிறேனா? என் நெஞ்சு படும் வேதனை அந்தக் கடவுளுக்குத்தான் தெரியும். இப்படி ஆகாரமில்லாமல் கிடந்து வாடுகிறதைப் பார்க்க முடியவில்லை. உலகத்தில் இப்படிப் பெண்கள் உண்டா? நமக்கும் அவருக்கும் மலைக்கும் மடுவுக்கும் இருக்கு.

**சிந்தா:** அம்மா!

**கேசி:** நான் பேசலே, பேசலே, பேசினது தப்பு!

**சிந்தா:** வேண்டாம், வேண்டாம். நீ பேசிக்கொண்டேயிரு. நான் இதோ போகிறேன்.

*சங்கீதம் - வீணை பதம் - இரண்டு அடியுடன் நிற்கிறது. நந்தவன சப்தம்.*

**சிந்தா:** எங்கே தொலைந்தாள்? இங்கேயும் காணுமே? (மௌனம்—காலடிச் சத்தம்) அதோ (ஓடுகிருள்) ..உன்னை எங்கேயெல்லாம் தேடுகிறது? (மௌனம்) என்ன அப்படி உட்கார்ந்திருக்கிருயே? என்னயோசனை? (மௌனம்) பேசமாட்டாயா?

**அருணை:** எல்லாம் பேசினதெல்லாம் போதும்.

**சிந்தா:** அருணை இதென்ன இது?

**அருணை:** நீ உன் அம்மாவுக்குப் பெண்ணாய் இருக்கிறதை நான் கெடுத்தேனா? உன் புத்தியை நான்தான் கலைத்தேனும்.

**சிந்தா:** யார் சொன்னு?

**அருணை:** உன் தாயார் தான்.

சிந்தா: நீ என்ன கலக்கிறது?

அருணா: போதுமடி அம்மா. உங்களுக்குள்ளே என்ன வேணுமானாலும் செய்து கொள்ளுங்கள். என்னை வம்பில் இழுக்காதே. நமக்குள்ளே பேச்சு வார்த்தைகூட வேண்டாம்.

சிந்தா: என்னடி இது? அம்மா சொன்னால் அவளிடம் கோபித்துக்கொள்ளேன். என்னிடம் என்ன கோபம்?

அருணா: இவ்வளவுக்கும் நான் உனக்கு நல்லதைத் தான் சொல்லுகிறேன். எட்டமுடியாத ஆசைகள் உதவாது. பறக்கமுடியாத உயரத்துக்குத் தாவக்கூடாது. அப்படியெல்லாம சொன்னேனா இல்லையா?

சிந்தா: அருணா, நீ சொல்லுகிறாய். அம்மாவும் சொல்லுகிறாள். எனக்காக எத்தனையோ கஷ்டப்படுகிறாள். என்றால் அவரை மறக்க முடியவில்லையே? நேற்றுக்கூடக் கண்டேன். தாரணிந்த விரிந்த மார்எத்தனை அழகடி. கனவுதான் என்று அறிந்தும்நெஞ்சு வெடித்து விடும்போல் இருந்தது.

அருணா: கனவு கனவாகவேதான் இருக்கவேண்டும்.

சிந்தா: அப்படியென்றால்?

அருணா: கனவு நினைவாக ஆகிவிட்டால் அதில் இனிப்பில்லை.

சிந்தா: வேதாந்தமா?

அருணா: இல்லை, உலக அனுபவம்.

சிந்தா: உனக்கும் ஆசை உண்டா—இந்தமாதிரி!

அருணா: ஆசையில்லாதவர் உலகத்தில் இல்லை.

சிந்தா: அப்படியானால்?

அருணை: ஆசையை நம்புவது தவறு. அனுபவத்தை நம்புவது புத்திசாலித்தனம்.

சிந்தா: என்னமோ அம்மா. எனக்கு விளங்கவில்லை. அவரை அடையாவிட்டால் இந்தப் பிராணன் தரிக்காதுபோலிருக்கிறது. இரா முழுவதும் அவரைக் கனவில் கண்டு மயங்குகிறேன். அவரை ஒரு தரம் கண்ணால் காண முடியாதா? இந்த உபகாரம் எனக்கு செய்ய மாட்டாயா?

அருணை: நான் என்ன செய்வது?

சிந்தா: எப்படியாவது அவரிடம் என் கதியைச் சொல்லி, இரக்கம் வரும்படி செய்யமாட்டாயா?

அருணை: என்னது, என்னை அரண்மனைக்குப் போகச் சொல்கிறாயா?

சிந்தா: எனக்காகச் செய்யக்கூடாதா? என் ஊர் சொல்லவேண்டாம். பேர் சொல்லவேண்டாம். நான் படும் அவஸ்தையைச் சொன்னால் அவர் மனம் இளகாதா? அவர் நெஞ்சு கல்லா?

அருணை: சரி, சரி, பைத்தியம் முற்றிவிட்டது. நான்போய், உனக்காக ஒரு பெண் காத்திருக்கிறாள், கண்ணீர்விட்டுக் கலங்குகிறாள் என்று சொன்னதும், சோழநாட்டு மன்னன் வெள்ளைக் குதிரைபூட்டிய ரதம் ஏறி வந்துவிடுவான். நீ புறப்படச் சித்தமாயிரு.

சிந்தா: என்னைப் பரிகசிக்கிறாயா?

அருணை: நான் பரிகசிக்கவில்லை. ஒரு கேள்வி கேட்கிறேன். உனக்கு பரிசம் வைத்த மங்களகன் போர்க்களத்திலிருந்து திரும்பிவந்தால் என்ன பதில் சொல்லப் போகிறாய்? (மௌனம்) என்ன பேசவில்லை? பதில் சொல்லு.

**சிந்தா:** என்ன சொல்லுவேன். அருணா, என் நெஞ்சு அனலில்பட்ட மெழுகுபோல் தவிக்கிறது.

**அருணா:** மங்களகர் போருக்குப் போகும்போதுகூட அவரைப் போகவேண்டாம் என்று வழிமறித்தாயே?

**சிந்தா:** ஆம், உண்மைதான்.

**அருணா:** இதே முல்லைக் கொடியின் அருகில், எத்தனை இரவுகள் வந்து அவருக்காக ஏங்கி நின்றாய்? இந்த முல்லை அரும்பைப்போல் இருக்கிறது உன் பல் வரிசை, ஆனால் உன் பற்கள் என்றும் வாடாத மலர்கள், என்றும் புகழ்ந்தார் என்று சொன்னாயே?

**சிந்தா:** போதும், அருணா. இனி ஒன்றும் சொல்லாதே. என்னால் தாங்கமுடியாது.

**அருணா:** உனக்காக அவர் விண்ணையும் போரில் ஜெயித்து வருவார். உன் அன்புக்காகத் தீயையும் ஏறி மிதிப்பார்.

**சிந்தா:** அருணா, அவரை நினைக்க என் நெஞ்சு கூசுகிறது. ஆனால், மன்னவனை...மாரனைத் தோற்கச் செய்யும் அவர் இனிய உருவத்தை என்னால் மறக்க முடியவில்லையே. நான் என்ன செய்வேன்?

இது வரையில் கீதம் தொடர்ந்து வந்து நிற்கிறது.

**அருணா:** இதற்கு ஒரு வழிசொல்லக் கூடியவர் இருக்கிறார். வருகிறாயா?

**சிந்தா:** யாரவர்?

**அருணா:** சாத்தனார்.

**சிந்தா:** அந்தக் குருட்டுக் கிழவரா? அவர் என்ன சொல்லப் போகிறார்?

**அருணை:** சிந்தாமணி, நீ குழந்தை. அவருக்குக் கண் குருடுதான். ஆனால், அறிவு சுடர் விளக்கு. அவருடைய அனுபவம் கடல் போன்றது. வா, போகலாம்.

**சிந்தா:** எனக்கு மனம் நிலை குலைந்து கிடக்கிறது. உடல் சோர்ந்து விட்டது. நான் வரவில்லை. மனநோய்க்கு மருந்து எங்கிருந்து வரப்போகிறது? மரணத்தில்தான் நிம்மதி கிடைக்கும். நீ, போ.

**அருணை:** சரி.

*காட்சி மாற்றம் சங்கீதம்.*

*போகிறாள்—தெரு சப்தம்—வண்டிகள் ஓடுவது — மங்கிய பேச்சுக் குரல்கள்.—சத்தம் மறைகிறது.*

**அருணை:** பெரியவருக்கு வணக்கம்.

**சாத்த:** (கழியைத் தட்டிக்கொண்டே) யாரு?

**அருணை:** நான்தான் அருணை.

**சாத்த:** ஓஹோ! வா அம்மா, என்ன விசேஷம்?

**அருணை:** ஒன்றுமில்லை. உங்களைப்பார்த்து வெகுநாளாச்சு...பார்த்துவிட்டுப் போவோம் என்று வந்தேன்.

**சாத்த:** வாடிய மலரைத் தேடி வண்டுகள் ஏன் வரும்?

**அருணை:** அலர்ந்த மலர் என்றாவது வாடும், என்ற அறிவை உணரத்தான்.

**சாத்த:** பேஷ், நன்றாகப் பேசுகிறாய்? இந்த வயதில் உனக்கு என்னம்மா வாட்டம் வந்தது?

அருணை: சாத்தனூரே, என் உயிர்த்தோழி சிந்தாமணி, அறிவிழந்து கலங்குகிறாள். அவளுக்கு நீங்கள் தான் புத்தி சொல்லவேண்டும்.

சாத்த: யார்? கேசி மகளா? அவளுக்குத்தான் வதுவை முடிக்க நிச்சயமாகியிருந்ததே?

அருணை: மங்களகன்.

சாத்த: மாலையூர்ப் பையன்.

அருணை: மாலையூர்ப் பையன் போருக்குப் போய் விட்டான்.

சாத்த: நியாயம்தானே, சோழநாட்டில் காதலுக்கு அடுத்த தொழில் போர்தானே.

அருணை: தனியாயிருந்த கன்னி மன்னவனைக் கண்டு விட்டாள். மால் கொண்டுவிட்டாள்.

சாத்த: சரிதான்.

அருணை: அந்தியும் பகலும், அனவரதமும், அதே சிந்தை.

சாத்த: ஓஹோ.

அருணை: நீங்கள் அவள் மனத்தை மாற்றவேண்டும்.

சாத்த: உடல் நோய்க்கு மருந்துண்டு, மன நோய்க்கு மருந்தேது?

அருணை: மனம் வைத்தால் உங்களால் முடியாத காரியம் உண்டா?

சாத்த: என்னவோ பார்ப்போம். அவளை இங்கே அழைத்து வாயேன்.

அருணை: வரும்போது அழைத்தேன். வர மறுத்துவிட்டாள். எப்படியாவது சிரமப்பட்டு ஆலயத்துக்குப்போவோம் என்று சொல்லி இங்கே அழைத்து வருகிறேன். நீங்கள் தான்....

சாத்த: ஆஹா, அழைத்துவா.

அருணை: நான் வருகிறேன்.

**சாத்த:** உனக்கு மங்களமுண்டாகும்.

*அருணை போகிருள்—மங்களகரன் மெதுவாக வந்து நிற்கிருன்—கிழவர் கைத்தடியால் தட்டுகிருர்.*

**சாத்த:** வருவது வாலிபன்தான். நடையானுல் தளர்ந்திருக்கிறது.

**மங்கள:** சாத்தனுரே, மங்களகரன் வணங்குகிறேன்.

**சாத்த:** மாலையூர்ப் பிள்ளையா ? வா அப்பா. போர்க்களத்திலிருந்து எப்போது வந்தாய் ?

**மங்கள:** இப்போதுதான் வந்தேன்.

**சாத்த:** இப்போதுதான் வந்துகொண்டிருக்கிருயோ ?

**மங்கள:** இல்லை, வந்து ஒரு நாழிகையாகிறது.

**சாத்த:** ஓஹோ, மன்னவனை இன்னும் காணவில்லையே ?

**மங்கள:** வந்துகொண்டிருக்கிருர்.

**சாத்த:** அப்படியானுல் ?

**மங்கள:** போர் வெற்றிதான்.

**சாத்த:** நல்லவேளை. பயந்துவிட்டேன். ஆனுல்... உன் குரலில் உற்சாகமில்லையே ? போரில் எதிரியைப் புறங்காட்டச் செய்த பூரிப்பு இல்லையே ?

**மங்கள:** சாத்தனுரே, வாழ்க்கையே போராட்டம் நிறைந்தது. வாழ்க்கைப்போரில் வெற்றிகண்டவர்கள் வெகு குறைவு. ஜன்மம் முடிந்தால்தான் போரும் முடிவடையும்.

**சாத்த:** என்ன அப்பா இது ? நல்ல காளைப்பருவம் ; இத்தனை கசப்பு ஏன் வந்தது ?

**மங்கள:** சாத்தனுரே, பிரமனுக்கு அறிவில்லை. அழகைப்படைத்த இடத்தில் குணத்தை வைக்க மறந்து விடுகிருன்.

சாத்த: குணமும் நிர்க்குணமும் உன் மனோ விகல்பந் தானே ?

மங்கள: என் மனோ விகல்பமா ? —நான் போருக்குச் செல்லும்போது என்னை வழி மறித்தாள். கண்ணீர் ஆருய்ப் பெருக்கினுள். எனக்காகவே உயிர் வாழ்வதாகச் சொன்னுள்.—

சாத்த: ஓஹோ!

மங்கள: என்னது...

சாத்த: ஒன்றுமில்லை—

மங்கள: சும்மா சொல்லுங்கள்.

சாத்த: காதலர்களுக்கும் கவிகளுக்கும் தர்க்க சாஸ்திரம் பொருந்தாது என்று பெரியவர்கள் சொல்லுவார்கள்.

மங்கள: அப்போது என்னை சித்தம் பிசகினவன் என்கிறீர்களா ?

சாத்த: அப்படிச் சொல்லவில்லை.

மங்கள: பின் ?

சாத்த: பதருதே...பொறு.

மங்கள: பொறுக்கவாவது ? என் உயிர் துடிக்கிறது. என் நெஞ்சைச் சிதறவடித்துவிட்டாள். எனக்கு இனி வாழ்வு எதற்கு ? நான் இருந்தாலும் ஒன்றுதான், இறந்தாலும் ஒன்றுதான்.

சாத்த: நீ பிறப்பதும் உன் கையில் இல்லை. நீ இறப்பதும் உன் கையில் இல்லை.

மங்கள: நீங்கள் வேதாந்தம் பேசலாம். நான் படும் வேதனை உங்களுக்கு எப்படித் தெரியப்போகிறது ? இந்த உலகத்தில், இந்த ஜன்மத்தில் அவ

ளைத் தவிர வேறு ஒன்றுமே வேண்டாம் என்று நினைத்தேன். அவளுடைய விழிக்கோணத்தைக் கண்டதும், அவளுடைய இளமுறுவல் ஒன்றே சகல ஐஸ்வர்யமும் என்று எண்ணினேன்.

**சாந்த:** அப்பா, நீ குழந்தை, பொறு.

**மங்கள:** இந்தச் சண்டையில் எத்தனையோ தலைகளை வெட்டிக் குவித்தேன். வெற்றி யடைந்தேன். ஆனால் எனக்கு ஒன்றும் தெரியாது. என் பிரக்ஞை எனக்கு இல்லை. எல்லாம் அவளுடைய நினைவுதான். அவளுடைய அன்பிலே, அவளுடைய காதல் நினைப்பிலேதான் போர் புரிந்தேன். ஆசையுடன் ஓடிவந்தேன். அவளைக் காணவில்லை. என்னை மோசம் செய்துவிட்டாள்.

**சாந்த:** மங்களகா!

**மங்கள:** என்னை என்ன செய்யச் சொல்லுகிறீர்?

**சாந்த:** சற்று முன் நீதானே சொன்னாய்? வாழ்க்கை ஒரு தீராத போராட்டம் என்று. அதில் அவளுடைய பங்கை அவள் அனுபவிக்கிறாள். அவளும் உன்னைப்போல் வாலிபம். அதிலும் பெண் பிள்ளை.

**மங்கள:** நீங்கள் சொல்லுகிறபடி கேட்கிறேன். அவள் எனக்குக் கிட்டுவாளா?

**சாந்த:** கட்டாயமாய்க் கிட்டுவாள். உள்ளம் நிறைந்த அன்பு என்றும் வீண் போகாது.

**மங்கள:** உள்ள நிறைவில் கள்ளம் புகுந்தால்?

**சாந்த:** கட்டவிழ்த்துக்கொண்டு ஓடிய ஆடு கட்டாயம் வீடு திரும்பும். மீண்டும் போகாது.

**மங்கள:** உங்கள் சொல்லைக் கேட்கிற போது சமாதானமா யிருக்கிறது.

**சாத்த:** இரு, அங்கே யாரோ வரும் சத்தம் கேட்கிறதே?

**மங்கள:** அருணை, அவள் தோழி.

**சாத்த:** இங்கேதான் வருகிறாள்....

**அருணை:** மங்களகரே வணங்குகிறேன். போர் வெற்றி தானே?

**மங்கள:** வெற்றிதான்.

**சாத்த:** அந்தப் போர் முடிந்தது. இன்னொரு போர் ஆரம்பம் ஆகிவிட்டது....மங்களகனுக்கு.

**அருணை:** அதென்ன?

**சாத்த:** இதில் வெற்றி எளிதல்ல. உருவமற்ற எதிரியை வெல்வது கடினமல்லவா?

**மங்கள:** என்ன பரிகசிக்கிறீர்?

**சாத்த:** ஏன் அம்மா அருணை, உன் தோழி எங்கே?

**அருணை:** அவளைத்தான் தேடுகிறேன். கவலையா யிருக்கிறது. எங்கேயும் காணவில்லை.

**மங்கள:** எங்கே போய்விட்டாள்?

**அருணை:** முல்லைக்கொடி வீட்டில் விட்டுவந்தேன். நிலை குலைந்துபோய் நின்றாள்.

**மங்கள:** நான் அங்கே போயிருந்தேனே. அங்கே இல்லையே?

**சாத்த:** எங்கே போயிருப்பாள்?

**மங்கள:** நான் போய்ப் பார்க்கிறேன்... (ஓடுகிறாள்)

**அருணை:** மங்களகருக்கு எல்லாம் தெரியுமோ?

**சாத்த:** எல்லாம் தெரியும்.

**அருணை:** என்ன சொல்லுகிறார்?

**சாத்த:** என்ன சொல்லுவான்? புலம்புகிறான்.

அருணை: பாவம்...அதோ அவளே வந்து விட்டாள்.

சாத்த: யார்? சிந்தாமணியா?

அருணை: ஆம், சிந்தாமணி! சிந்தாமணி!

சிந்தா: இங்கே என்ன செய்கிறாய்?

அருணை: நீ எங்கே போனாய்? உன்னைத் தேடித்தான் அலைகிறேன். போர் முடிந்து விட்டது.

சிந்தா: முடிந்து விட்டதா?

அருணை: ஆம், நம் மன்னன் சென்னிவளவன் வெற்றி யின்றித் திரும்புவானா?

சிந்தா: அவர் வந்துவிட்டாரா?

அருணை: வந்து விட்டார். இத்தனை நேரம் இங்கே தான் இருந்தார். உன்னைத் தேடிக்கொண்டு தான்போயிருக்கிறார்.

சிந்தா: யாரைச் சொல்லுகிறாய்?

சாத்த: அருணை, அவள் சொல்லுகிறது வேறு ஒரு வரை. அவர் இப்போதுதான், தான் வெட்டிக் குவித்த தலைகள் உதிர வெள்ளத்தில் புரண் டோடும் காட்சியைக் கண்டு களித்துக்கொண் டிருக்கிறார்.

சிந்தா: உமக்கு எப்படித் தெரியும் நான் நினைத்தது?

சாத்த: உன் குரலிலிருந்து அறிந்தேன். உன் நடைத் தளர்ச்சியிலிருந்து உணர்ந்தேன்.

சிந்தா: உமக்கு என்ன தெரியும்?

சாத்த: எவ்வளவோ தெரியும் அம்மா....உன் மேனி நலம் குறைந்து, குன்றிவிட்டது. உன் கண்கள் கனவு கண்டு கண்டு சோர்ந்து விட்டன. உன் நெஞ்சு கானல் நீரை நம்பி ஓடிய கவரிமானைப் போல் ஏங்கி நிற்கிறது.

சிந்தா: கானல் நீர் எது?

சாந்த: நீ நம்பிய கனவுதான்.

சிந்தா: காதல் என்பது பொய்யா?

சாந்த: காதல் பொய்யல்ல; கனவு.

சிந்தா: கனவு நினைவாக முடியாதா?

சாந்த: கனவுக்கு அழகு, அது கனவாக இருப்பது தான்.

சிந்தா: உள்ளன்புடன் நினைக்கும் ஆசை நிறைவேற இந்த உலகத்தில் வழியில்லையா? என் உடல் முழுவதும், என் ஒவ்வொரு மூச்சிலும் நிரம்பி யிருக்கும் ஆசை ஈடேற முடியாதா?

சாந்த: ஆசையும் காதலும் நிறைவேற இடமுண்டு. உள்ளன்பு என்பது ஒருவருக்குமட்டும் அல்ல.... இதயத்துடன் இதயம் ஒன்று சேரும்போது அன்பு உதிக்கிறது. அது அழியாதது. அவர்கள் இருந்தாலும் பிரிந்தாலும், என்றும் நின்று மணங் கமழும்.

சிந்தா: என் விஷயத்தில் அப்படியில்லை என்று என்ன நிச்சயம்?

சாந்த: உன் விஷயத்தில உண்மைதான். ஆனல் இடம் தவறிவிட்டாய்? உன் இலக்குத் தவறி விட்டது.

சிந்தா: நான் ஒன்றும் குறி தவறவில்லை. நான் மன்ன னுக்குத்தான் மாலையிடுவேன்.

சாந்த: மன்னவனை எதிர்த்த மாற்ருன் நாடு பாழடைந்து பாலைவன மாகிவிடும். அதேபோல் மன்னவனை நேசித்த பெண்கள் இதயமும் பாழ் தான்.

சிந்தா: மன்னவனை நினைத்துக்கொண்டே நான் மடிய சித்தமாயிருக்கிறேன்.

**சாத்த:** மன்னவனை நினைத்து மடியலாம். வாழ முடியாது.

**சிந்தா:** அப்போது மன்னனை நேசிப்பது தவரு?

**சாத்த:** நேசிப்பது தவறில்லை. நேசம் நேசமாயிருக்க வேண்டும். ஆசை ஆசையாயிருக்கவேண்டும். காதல் கனவாயிருக்கவேண்டும். (மௌனம்).... குழந்தாய், மன்னன் ஒரு லட்சியம். மக்களின் கனவுக்கு ஒரு எல்லை. அவன் எண்ணம் போரில் தான். அவன் நினைப்பெல்லாம் மாற்றானை மடிப்பதில்தான்.

*கொஞ்சம் கொஞ்சமாகத் தெரு சத்தம் அதிகரித்துக் கேட்கிறது. குதிரைக் கால் சத்தம் கேட்கிறது.*

**சாத்த:** இதோபார், மன்னன் வந்துவிட்டான். வெற்றிக்கொடியுடன். இன்னொரு ஆயிரம் தலைகள் புழுதியில் உருண்டன. இன்னொரு நாட்டின் மேல்...நாடாயிருந்த காட்டின்மேல் புலிக்கொடி பறக்கத் தொடங்கிவிட்டது. இதுதான் மன்னவன். இதுதான் மனித லட்சியம். இதுதான் காதல் கனவு.

*குதிரைக் காலடி சத்தம் சமீபம்.*

**சாத்த:** இந்தக் குதிரையைப் பார். இதன் கால் குளம்பைப் பார். ஒரே பொன் மயம். உரை கல்லைப்போல்....எதிரி மன்னர்களின் மகுடங்களை உதைத்ததின் பலன்.

*தெரு சத்தம் அதிகரித்துக் கேட்கிறது — யானையின் மணியோசை பலமாகக் கேட்கிறது.*

**குரல்:** யானை....யானை....யானை வருது.

**சாத்த:** அந்த யானையைப் பார். அதன் தந்தம் எங்கே? ஆயிரக் கணக்கான மனிதர்களைக் கொன்று

தேய்ந்து விட்டது. அதன் பாதங்கள். உதிர வெள்ளத்தில் தோய்ந்து செங்காவி யேறிவிட்டன. (மணிச் சத்தம் சமீபத்தில் கேட்கிறது.)

**குரல் 1:** யானை வருது.

**குரல் 2:** அய்யய்யோ, மதயானை! வெறிபிடித்தது!

**குரல் 3:** ஐயோ! போங்கள்! போங்கள்! யானை! யானை!

**அருணை:** அய்யோ, சிந்தாமணி, வாடி இப்படி...

**சிந்தா:** அய்யய்யோ (ஓடுகிறாள்)

**மங்கள:** (தூரத்தில்) சிந்தாமணி!

**குரல் :** அய்யோ பாவம்!

சத்தம் குறைகிறது—யானையின் சத்தம் மறைகிறது. சங்கீதம்.

**அருணை:** நல்லவேளை! பிழைத்தாள்.

**மங்கள:** (மெதுவாக) பயப்படாதே கண்ணே...

**சிந்தா:** நீங்களா? ஏன் என் உயிரைக் காப்பாற்றினீர்கள்?

**மங்கள:** சமயத்தில் கடவுள் என்னைக் கொண்டுவந்து சேர்த்தார்.

**சிந்தா:** இந்தப் பாபியை ஏன் காப்பாற்றினீர்கள்?

**மங்கள:** அப்படிச் சொல்லாதே, கண்ணே!

**சிந்தா:** உங்கள் அன்புக்கு அருகதை யில்லாதவள் நான்.

**மங்கள:** எல்லாவற்றையும் மறந்துவிடு.

**சிந்தா:** உங்கள் அன்பை மறக்கமுடியாது.

**சாத்த:** மங்களகா, வாழ்க்கைப் போரிலும் வென்று விட்டாய்.

**மங்கள:** உங்கள் ஆசீர்வாதம்.

**சாத்த:** கடவுள் உங்களுக்கு அருள் புரிவார்.



# பாடலியின் காதல்

| | |
|---|---|
| புத்ரகன் | பாடலி |
| ராஜா | ராணி |
| கவி | காஞ்சனை |
| சேனபதி | சேடி |
| காவல்காரர்கள் | |

*முன்னுரைக்குப் பின்னணியாக சங்கீதம் ஒலித்துக்கொண்டிருக்கிறது.*

**அறிவிப்பாளர்:** *பாடலிபுரம் என்ற நகரம் ஒரு காலத்தில் நகரங்களுக்குள்ளே தலை சிறந்து விளங்கியது. தேவேந்திரனுடைய அமராவதியும், குபேரனுடைய அழகாபுரியும் அதன் அழகுக்கு ஈடாகாது. அது ஞானிகளின் அறிவு. காவிய கர்த்தர்களின் கனவு. காதலர்களின் உள்ளக் கனிவு. அந்த நகரம் உற்பத்தியானதே ஒரு கதை. அதுதான் இந்தக் கதை.*

***சங்கீதம் கனமாக மாறுகிறது.***

**ராணி:** *சேடி, பாடலி எங்கே?*

**சேடி:** *ராஜகுமாரி சயனக் கிருஹத்திலேயிருந்து வெளியில் வரவில்லை, மகாராணி.*

**ராணி:** *நேற்று சாப்பிட வில்லையாமே? ஏன்?*

**சேடி:** *ஏனோ தெரியவில்லை அம்மணி. யாருடனும் பேசவில்லை. தனியாகப் போய்ப் படுத்துக்*

கொண்டுவிட்டாள். யார் போனாலும் கோபமாய் எரிந்து விழுகிறாள்.

**ராணி:** என்ன காரணம்?

**சேடி:** தெரியவில்லை, அம்மணி.

**ராணி:** காஞ்சனை எங்கே?

**சேடி:** இளவரசியின் அரண்மனைக்குள் போனாள், அதோ இளவரசி.

**ராணி:** பாடலி....உன் உடம்புக்கு என்ன அம்மா? (மௌனம்) என்ன, சொல்லம்மா? (மௌனம்) மனக் கவலையா? இந்த மகத சாம்ராஜ்யத்துக்கே ஏக சக்ராதிபதி உன் தந்தை. உனக்கு என்ன குறை?....என்னிடம் சொல்லமாட்டாயா?

**பாடலி:** என்னைத் தொந்திரவு செய்யாதே (நடந்து போகிறாள்)

**ராணி:** அதிசயமாய்த்தான் இருக்கிறது. அடி, காஞ்சனை? இங்கே வா.

**காஞ்சனை:** ஏன் கூப்பிட்டீர்கள்?

**ராணி:** உன் தோழிக்கு என்ன வந்தது?

**காஞ்சனை:** நேற்று வழக்கம்போல் வேட்டையாடப் போனோம். வேட்டை முடிந்ததும் ஊருக்குத் திரும்பினோம். அப்போது இனிமையான குழலோசை கேட்டது. அதைக் கேட்டுப் பாடலி ரஸித்துக் கொண்டே நின்றாள்.

**ராணி:** யார் குழல் வாசித்தது?

**காஞ்சனை:** அதே கேள்வியைத்தான் பாடலியும் கேட்டாள். அந்தக் குழலின் இனிமையைக் கேட்டு சொக்கிவிட்டாள். அந்த வாத்தியத்தை வாசித்தவன் ஒரு மேதாவி என்று தோன்றிற்று.

அவனிடம் வித்தை கற்றுக்கொள்ள வேண்டும் என்று இச்சித்தாள்.

ராணி: இவள் கற்றுக்கொண்ட வித்தைக்கு எல்லை கிடையாதே?—அப்புறம்?

காஞ்சனை: அப்புறம் என்ன? இளவரசி பாடலி மனதில் ஒன்று நினைத்துவிட்டால் அது நடந்த மாதிரி தானே?

ராணி: அவரைப் போய் யாசித்தாளா?

காஞ்சனை: யாசகமா? மகேந்திரவர்ம சக்கரவர்த்தியின் ஏக புத்திரி, யாசிக்கும் இடம் கூட உண்டா? எங்களைப்போய் அவரைக் கையோடு அழைத்து வருமபடி உத்தரவிட்டாள். நாங்கள் போனோம். கடைசியில் ஒரு ஏழைப் பிராமணன் மரத்தின் மேல் உட்கார்ந்திருந்தான்.

ராணி: அவனா வாசித்தவன்?

காஞ்சனை: ஆமாம். அந்த நாடோடி வாலிபனிடமிருந்து தான் அந்த சுகநாதம் கிளம்பியது. அவனிடம் விஷயத்தைச் சொன்னோம். அவன் சிரித்துவிட்டு 'வானத்தில் திரியும் பட்சி கூலிக்குப் பாடாதென்று போய்ச் சொல்' என்று சொல்லிவிட்டான்.

ராணி: என்ன கர்வம் ?

காஞ்சனை: அவன் பரதேசிதானே ? ராஜகௌரவம் அவனுக்கு எப்படித் தெரியும்?

ராணி: வாஸ்தவந்தான்.

காஞ்சனை: இதைச் சொன்னால் பாடலி கோபித்துக் கொள்ளுகிறாள், பிடிவாதம் பிடிக்கிறாள். எப்படியும் அவனைக் கொண்டு வந்தாகவேண்டுமென்கிறாள்.

ராணி: அவளுக்குப் பிடிவாதமே ஜாஸ்தி.

காஞ்சனை: நமக்கு இணையானவர்களுடன் போட்டி போடலாம். அற்பர்களுடன் போட்டியிடலாமா?

ராணி: நான் போய் அவருக்குச் சொல்லுகிறேன்.

காஞ்சனை: இதோ, மஹாராஜா வருகிறார்கள். (காலடிச் சத்தம்)

ராஜா: பாடலீ எங்கே?

ராணி: அவள்தான் கோபித்துக் கொண்டிருக்கிறாளாம்.

ராஜா: எதற்கு?

ராணி: யாரோ பரதேசிப் பையனைக் கூட்டிக்கொண்டு வரவேண்டுமாம்.

ராஜா: அவன் யார்?

ராணி: நன்றாகக் குழல் ஊதுகிறவனாம்.

ராஜா: ப்பூ....இவ்வளவுதானே? இந்த ஜம்புத்வீபத்திலே சிறந்த குழல் வித்வானையே தருவிக்கிறேன்....மகத சாம்ராஜ்யத்தின் ராஜபுத்திரி ஒரு அனாமதேயத்திடமா வித்தை பயில்வது?

ராணி: இதோ அவளே வந்துவிட்டாள்.

ராஜா: அம்மா பாடலீ....இதற்காக வருந்தாதே... குழல் ஊதுவதில் கிருஷ்ணனையே தோற்கடிக்கக் கூடிய வித்வான்கள் நம் ராஜ்யத்தில் இருக்கிறார்கள்.

பாடலி: அவர்கள் வேண்டியதில்லை.

ராஜா: . என்ன? மகத சபை வித்வான்களைவிடச் சிறந்தவனா அந்தப் பரதேசி?

பாடலி: நீங்கள் கேட்டிருந்தால் தெரியும்.

**ராஜா:** *நீ குழந்தை....*

**பாடலி:** *உங்களுக்குக் குழந்தைதான். ஆனால் பரத கண்டம் போற்றும் பத்ம தேவரிடம் சங்கீதம் பயின்றிருக்கிறேன். நாட்டியாசார்யர் நாதமுனியிடம் பரதம் கற்றிருக்கிறேன். சகலகலா வல்லவரான சதாவதான சாது சிரோமணியிடம் இலக்கண இலக்கியம் கேட்டிருக்கிறேன்.*

**கவி:** *இவ்வளவும் கற்ற நீ இந்த அற்பக் குழலை இச்சிப்பானேன்?*

**ராஜா:** *கவிஞரே வாரும்.*

**பாடலி:** *தந்தையே, அவன் என்னை அவமானம் செய்தான்.*

**ராஜா:** *அவமானம் செய்தானா?*

**பாடலி:** *நான் அழைத்துவரச் சொன்னேன். வரமுடியாது என்றான்.*

**ராஜா:** *அவ்வளவு கர்வமா அவனுக்கு?*

**பாடலி:** *எப்படியாவது அவனைக் கொண்டு வர வேண்டும்.*

**கவி:** *சுதந்திரமுள்ள பட்சி கூட்டுக்குள் தானே அடைபட விரும்புமா?*

**ராஜா:** *தானாக வராத போனால் வரும்படி செய்ய எனக்குத் தெரியும்.*

**கவி:** *அது வீண் பிரயாசை. விபரீதமாக முடியும்.*

**ராஜா:** *கவிஞரே, இந்த மகேந்திர சக்கரவர்த்தியின் ஆணையை ஒருவன் மீற முடியுமா?*

**பாடலி:** *எவ்வளவு அலட்சியமாகப் பேசினான்....*

**ராஜா:** *எங்கேயிருந்தாலும் அவனை நான் கொண்டு வரச்செய்கிறேன். நம்முடைய ஆக்ஞையை மீறினால் சவுக்கின் ருசியை அறிவான்.*

(ராஜா போகிறார். காலடிச்சத்தம் - சிறிது சோகம் கலந்தி சங்கீதம் கேட்கிறது.

**கவி:** அரியணைமேல் வீற்றிருக்கும் அரச குலத்தில் பிறந்தாலும் அவர்களுக்கும் அனுபவ காலம் வரும். கஷ்டமும் சுகமும் அவர்களுக்கும் உண்டு.

**ராணி:** அவன் யார் ?

**கவி:** யார்கண்டது ? ஒரு சாம்ராஜ்யத்தில் அஸ்தி வாரத்தை ஒரு தனி மனிதனால தகர்த்துவிட முடியும். இரும்பு உளிக்கு மசியாத மலைப்பாறை ஒரு சல்லிவேர்க்கு இடம் கொடுத்துவிடும்.

**ராணி:** நீர் சொல்வது பயமாயிருக்கிறதே ?

**கவி:** பயப்படவேண்டாம். விதியின் வழியை யாரால் தடுக்க முடியும்?

(சங்கீதம் மாறுகிறது—துரிதமான சங்கீகம் சிறிது கேட்டு நிற்கிறது—நான்கு வீரர்கள் நடக்கும் சத்தம்)

**ராஜா:** யாரது ?

**வீரன்:** அந்த பிராமண வாலிபனைக் கொண்டுவந்து விட்டார்கள் மகாரஜா...?

**ராஜா:** இங்கே வரச்சொல்.

**வீரன்:** உத்தரவு.

(காலடிச் சத்தம்) (மௌனம்)

**ராஜா:** ஏ இளைஞனே, நீ யார் ?

**புத்ரகன்:** அது யாருக்குத் தெரியும் ?

**ராஜா:** டே கேட்டதற்குப் பதில் சொல்....நீ எந்த ஊர் ?

**புத்ரகன்:** வந்த இடம் தெரியாது. போகும் இடம் தெரியாது. இருக்கும் இடம் அறிவேன்.

**ராஜா:** டே, அதிகப்ரசங்கி! பதில் சொல்லுகிருயா, இலலையா?

**புத்ரகன்:** சொல்வதெல்லாம் பதில்தான்.

**ராஜா:** ஏ பரதேசி, உன் குறும்புத்தனத்தை இங்கே காட்டாதே. நான் யார் தெரியுமா?

**புத்ரகன்:** மனு நீதி தவருத மன்னர். மகத ராஜ்யத்தின் ஏக சக்ராதிபதி.

**ராஜா:** நான் சொல்வதைச் செய்கிருயா, இல்லையா?

**புத்ரகன்:** என்ன செய்யவேண்டும்?

**ராஜா:** உன் குழலையெடுத்து ஊது...

**புத்ரகன்:** என் வித்தையைக் காட்டி உங்களிடம் வெகுமதி பெற நான் வரவில்லை.

**ராஜா:** மறுத்தால் என்ன கிடைக்கும் தெரியுமா?

**புத்ரகன்:** குணமுள்ளவர்களைப் போஷிக்காது போனுலும் குற்றம் செய்யாதவர்களைத் தண்டிப்பது தான் உங்கள் நீதியோ?

**ராஜா:** டே பதரே! அதிகம் பேசாதே,

**புத்ரகன்:** உங்களிடம் பேச நானுக வரவில்லை.

**ராஜா:** நான் கட்டளையிடுகிறேன், செய்கிருயா இல்லையா?

**புத்ரகன்:** உங்களுடைய ஆதரவை நான் விரும்பவில்லை. அதனுல் உங்கள் கட்டளைக்குப் பணிய அவசியமில்லை.

**ராஜா:** ஆ! அவ்வளவு திமிரா உனக்கு! டேய்!

**வீரன்:** மகாராஜா....

**ராஜா:** இவனைக் கொண்டுபோய் காராக்ருஹத்தில் அடையுங்கள்.

*சங்கீதம் கேட்கத் தொடங்குகிறது*

**வீரன்:** உத்தரவு.

**புத்ரகன்:** ஏ மதியிழந்த மன்னு, நீ என் உயிரைப் பறிக்கலாம். என் உணர்ச்சியைப் பறிக்க முடியாது. என் உடலைச் சித்திரவதை செய்யலாம். என் சுதந்திரத்தைக் கொல்ல யாராலும் முடியாது.

**பாடலி:** தந்தையே பொறுங்கள்....ஐயா, உம்முடைய வித்தையை நான் மெச்சுகிறேன்.

**புத்ரகன்:** அப்படியா?

**பாடலி:** உம்மிடம் சிட்சை பயில விரும்புகிறேன். நான்தான் உம்மை அழைத்துவரச் சொன்னேன். நீர் சம்மதித்தால் உமது சுதந்திரம் கிடைக்கும்.

**புத்ரகன்:** ஏ ராஜகுமாரி, சுதந்திரத்தைப் பணயம் வைக்கும் சூதாடி அல்ல நான்.

**பாடலி:** ஐயா, நன்ருக யோசித்துச் சொல்லும்.

**புத்ரகன்:** யோசிப்பதற்கு ஒன்றும் இல்லை.

**பாடலி:** மறுக்கிறீரா?

**புத்ரகன்:** ஆம். வித்தையை விலைகூறும் வாணிபன் அல்ல நான்.

**பாடலி:** இந்த மகதபுரியின் ராஜகுமாரியாகிய நான் உம்முடைய வித்தையை மதித்து கௌரவிக்க விரும்புகிறேன்.

**புத்ரகன்:** உன் கௌரவமும் மதிப்பும் எனக்குத் தேவையில்லை.

**பாடலி:** ஆ! அவ்வளவு கர்வமா? தந்தையே, இவனைச் சித்ரவதை செய்தாலும் தகும்.

**ராஜா:** டே! கொண்டுபோ.

**வீரன்:** உத்தரவு.

*காலடிச்சத்தம், விலங்குச் சத்தம்.*

**கவி:** அரசே, வானத்தில் சஞ்சரிக்கும் வல்லூறு மண்ணில் நெளியும் புழுவுடன் போட்டியிடுமா?

**ராஜா:** கவிஞரே, உம்முடைய வேதாந்தம் அசந்தர்ப்பமானது.

**கவி:** என் வாய் மூடிவிட்டது.

*கனமான சோக சங்கீதம்—சங்கீதம் நிற்கிறது. சோலையில் பட்சிகள் சத்தம்*

**கவி:** யாரது? காஞ்சனையா?

**காஞ்சனை:** ஆம்.

**கவி:** ஏது, அஸ்தமிக்கும் வேளையில் பூப்பறிக்கிறாய்?

**காஞ்சனை:** ராஜகுமாரிக்கு.

**கவி:** ராஜகுமாரி என்ன சொல்லுகிறாள்?

**காஞ்சனை:** என்ன சொல்வது? தலைவலி போய் திருகுவலி வந்தது?

**கவி:** என்ன?

**காஞ்சனை:** அவனுடைய சங்கீதத்தில் விழுந்த மோகம் இப்போது ஆள்மேல் தாவி விட்டது.

**கவி:** ஒஹோ...

**காஞ்சனை:** எப்போதும் அவன் பேச்சுத்தான்.

**கவி:** சரிதான். மன்னாதி மன்னர்களெல்லாம் அவளை மணக்கப் போட்டியிட்டபோது அவர்களை உதறித் தள்ளினாள். இப்போது ஒரு ஏழைச் சிறுவனிடம் வீழ்ந்தாள்.

**காஞ்சனை:** விதியின் விளையாட்டு விசித்திரமாய்த்தான் இருக்கிறது. எப்படியாவது அவனைப் பார்க்க வேண்டுமாம்.

**கவி:** உனக்கு உத்தியோகம் சரியாயிருக்கும்.

**காஞ்சனை:** எனக்கு ஒன்றும் பிடிக்கவில்லை. கவிஞரே, மனதிற்குள் பயமாயிருக்கிறது. மகதபுரியின் இளவரசி எங்கே, ஏழை அஜ்ஞமதேயமான புத்ரகன் எங்கே?

**கவி:** காதலுக்குக் கண் இல்லை.

**காஞ்சனை:** இது நடக்கிற காரியமா? என்னவோ தலைவிதிப்படி நடக்கிறது. நான் போகிறேன்..

**கவி:** என்னசெய்தாலும் ஜாக்கிரதையாக நடந்து கொள். மகாராஜாவுக்குக் கோபம் வந்தால் மகளென்றுகூடப் பார்க்கமாட்டார்.

*காட்சி மாற்றம்—துரிதமான சங்கீதம்—இரவு சப்தங்கள்—பாராக்காரர்கள் பாராக் கொடுக்கும் சத்தம்*

**காவற்காரன்:** யாரது? நில்.

**காஞ்சனை:** உஸ்.......நான்தான்.......இதோ முத்திரை மோதிரம்.

**காவற்:** காஞ்சனையம்மாவா?

**காஞ்சனை:** ஆமாம், அந்தக் கைதியிருக்கும் இடம் எது?

**காவற்:** அதோ! (நிசப்தம்)

**காஞ்சனை:** (மெதுவாக) ஐயா, ஐயா.

**புத்ரகன்:** யார் ?

**காஞ்சனை:** நான்தான் காஞ்சனை. அரண்மனையிலிருந்து வருகிறேன்.

**புத்ரகன்:** என்னவேண்டும்?

**காஞ்சனை:** இளவரசி உங்களை விடுதலை செய்ய விரும்புகிறாள்.

**புத்ரகன்:** அதனால்?

**காஞ்சனை:** ஒப்புக்கொள்ளுங்கள்.

**புத்ரகன்:** இதற்காகவா வந்தாய்?

**காஞ்சனை:** ஐயா, இளவரசியை உங்களுக்குத் தெரியாது. சதா உங்களையே நினைத்து உருகுகிறாள்.

**புத்ரகன்:** அதற்காகத்தான் சித்திரவதை செய்யச் சொன்னாளா? பேஷ்!

**காஞ்சனை:** உங்களுடைய வித்தை அவள் மூலமாக விகசித்துப் பிரகாசிக்கும்.

**புத்ரகன்:** கண்டபேரிடம் மையல் கொள்ளுவதுதான் உங்கள் மன்னர் குல சம்பிரதாயமோ?

**காஞ்சனை:** ஐயா, அவள் அப்படிப்பட்டவள் அல்ல. எத்தனையோ பெரிய மன்னர்களை அவள் மறுத்துவிட்டாள்.

**புத்ரகன்:** இது விசித்திரம்தான். அன்பு ஏற்பட்ட இடத்தில் கைகால் விலங்கிட்டு சிறையில் அடைப்பதுதான் அதைக் காட்டும் வழியோ?

**காஞ்சனை:** நீங்கள் ஒப்புக்கொள்ளுங்கள். பிறகு பாருங்கள்.

**புத்ரகன்:** அன்புப் பரீட்சைக்கு எனக்கு அவகாசமில்லை. நீ போகலாம்,

**காஞ்சனை:** புத்ரகரே, நிதானித்துப் பதில் சொல்லும். சகல ஐஸ்வர்யங்களையும் படைத்த ஒரு அரசகுமாரி, வணங்காமுடி சக்கரவர்த்தியின்

ஏகபுத்திரி, உமக்காக வலுவில் வந்து காத்திருக்கிருள். உல்லங்கனம் செய்யாதேயும்.

**புத்ரகன்:** ஹ! ஹ! ஏ பெண்ணே, சுதந்திரம் என்ற ஐஸ்வர்யத்துக்கு ஈடானது எந்த உலகத்திலேயும் இல்லை. உன் இளவரசியைப்போல் பதினெட்டு இளவரசிகள் கிடைப்பதாலுைம் அதை இழக்க மாட்டேன், போ.

*காட்சி மாற்றம்—சங்கீதம்—சோலைப் பட்சிகள் சத்தம்*

**பாடலி:** (பாடுகிருள்)

கலங்குவதறியேன்—மனமே நீ

அநுபல்லவி

விலங்குகள்போல் மாந்தர் வேண்டிடும் வாழ்வை
விரும்பினையோ நீயும் வீழ்ந்தாயோ

சரணம்

நலங்கெடுவை—நாளை
நடப்பதறிகுவை—இன்றே
பலங்கொண்டு ஆண்கள் பாரினில் ஆள்வோர்
பாதம் வீழ்ந்துயிர் பேணுதல் தகுமோ

**கவி:** ஏது, ஏகாந்தமாய் இவ்வளவுதூரம்? (மௌனம்) பாட்டு ரொம்ப நன்ருய் இருந்தது. ஆனுல் கருத்து பொருத்தமில்லை.

**பாடலி:** என்ன சொல்லுகிறீர்?

**கவி:** நான் சொல்வது ஒன்றும் இப்போது ஏருது என்பது எனக்குத் தெரியும்.

**பாடலி:** என்ன?

**கவி:** மனம் ஒரே விஷயத்தைப்பற்றி நினைக்கிறது. வாய் ஒரே பேச்சைப் பேசுகிறது. கண் ஒரே உருவத்தைக் காண்கிறது. இதற்குப் பெயர் ஏகாக்ர சிந்தை என்று சொல்லுவார்கள்.

**பாடலி:** ஆ...ம்.

**கவி:** சிலசமயம் வேறு பெயரும் சொல்வது உண்டு.

**பாடலி:** என்ன?

**கவி:** காதல்.

**பாடலி:** கவிஞரே, என்னைப் பரிகசிக்க வந்தீரா?

**கவி:** இல்லை. உதவி செய்ய வந்தேன்.

**பாடலி:** என்ன உதவி?

**கவி:** வான வளையமும் ஒளிக்குவியலும் ஒன்றை யொன்று கலக்கும்போது நேரமும் நிமித்தமும் பார்ப்பதுண்டோ?

**பாடலி:** அப்படியென்றால்?

**கவி:** அன்றிலும் பேடும் நின்று நிதானிப்பதுண்டோ?

**பாடலி:** எனக்கு ஒன்றும் புரியவில்லையே?

**கவி:** உள்ளத்தில் ஒலிக்கும் இதயக் குரல் கட்டுத் தளையை உடைத்தெறியும். அதைப் பின்பற்று வோர் யோசிப்பதில்லை. அது எல்லையற்ற பலம் கொண்டது.

**பாடலி:** நான் என்ன செய்யவேண்டும்?

**கவி:** அகங்காரத்தைவிட்டால் ஆனந்தம் ஏற்படும். உன் இதயத்தின் கட்டளைப்படி நட.

**பாடலி:** கவிஞரே, உங்களுக்கு நன்றி செலுத்து கிறேன். என் கண்ணைத் திறந்துவிட்டீர்கள்.

*துரிதமான சங்கீதம்—காட்சி மாற்றம். இரவு சப்தம்—காவற்காரர்கள் பாராக்கொடுக்கும் சப்தம்*

**காவற்:** *யாரது! நில்!*

**பாடலி:** *நான்தான்.*

**காவற்:** *இளவரசியா?*

**பாடலி:** *உஸ். சத்தம்போடாதே. (நிசப்தம்) அன்பரே.*

**புத்ரகன்:** *யார்?*

**பாடலி:** *நான்தான். அகங்காரத்தால் கெட்ட அபாக்கியவதி.*

**புத்ரகன்:** *மகத சாம்ராஜ்யத்தின் ஏக சக்ராதிபதியின் மகளா?*

**பாடலி:** *உத்தமரே, மமதையினுல் அறிவிழந்தேன் தங்கள் பாதத்தடியில் சரணடைய வ்ந்திருக்கிறேன். ஏழையை க்ஷமிக்க வேண்டும்.*

**புத்ரகன்:** *பாடலீ, நீயா இப்படிப் பேசுகிருய்?*

**பாடலி:** *ஆம். தங்கள் மேன்மையை அன்று உணரவில்லே. அதிகார பலத்திஞல் எதையும் சாதிக்க முடியும் என்று எண்ணினேன். அபசாரம் செய்தேன். இதோ...(பூட்டைத் திறக்கும் சத்தம்)*

**புத்ரகன்:** *பாடலீ என்ன செய்கிருய்?*

**பாடலி:** *தங்களிடமிருந்து பறித்த சுதந்திரத்தை மீண்டும் அளிக்கிறேன்.*

**புத்ர:** *நான் வெளியே செல்ல மறுத்தால்?*

**பாடலி:** *நானும் உள்ளே வந்துவிடுவேன்.*

**புத்ர:** *பாடலீ, அறிவில்லாமல் பேசுகிருய்.*

**பாடலி:** பிரபு, இப்போது அறிவு வந்துவிட்டது. வெளியில் வாருங்கள்.

**புத்ர:** என்னால் நம்ப முடியவில்லையே?

**பாடலி:** பிரபு, தங்களைக் கண்டது முதல் என் உள்ளம் தங்களுக்கு அடிமையாகிவிட்டது. உள்ளன்பின் அதிசயத்தை இதுகாறும் நான் உணரவில்லை.

**புத்ர:** என்ன இது? நீ என்ன செய்யப்போகிறாய்?

**பாடலி:** தங்களைச் சிறையிலிருந்து விடுதலை செய்து விட்டேன். ஆனால் என் இதயத்திலிருந்து விடுதலை செய்ய முடியாது.

**புத்ர:** உன் தந்தை?

**பாடலி:** உங்களைத் தவிர வேறு யாரையும் பற்றி என் மனம் நினைக்கவில்லை. தாங்கள் சம்மதப்பட்டால் தங்கள் அடியைப் பின்பற்றி வருவேன்.

**புத்ர:** இல்லையானால்?

**பாடலி:** அன்னை கங்காதேவியிடம் சரண்புகுந்துவிடுவேன்.

**புத்ர:** பாடலீ, நீ என்னை வென்றுவிட்டாய். அன்று உன்னைக் கண்டேன். உன் உருவம் என் நெஞ்சில் பதிந்தது. ஆனால் என்னுடைய கர்வத்தால் உதாசீனம் செய்தேன்.

**பாடலி:** இது உண்மையா?

**புத்ர:** ஆம். பெரிய சக்ரவர்த்திகளுக்கும் முடி பணியாத புத்ரகன் உன் உள்ளன்பிற்கு அடிபணிந்து விட்டான்.

**பாடலி:** நான் பாக்கியவதி, பிரபு. என் உள்ளம் நிறைந்தது. வாருங்கள். இப்பொழுதே இங்கிருந்து போவோம்.

**புத்ர:** பாடலீ, என்கூட வந்தால் உனக்குக் கஷ்டம் தானே? அரண்மனையில் வளர்ந்த நீ நாடோடியுடன் அலைய முடியுமா? யோசித்துப் பார்!

**பாடலி:** பிரபு, தாங்கள் சமீபத்தில் இருந்தால் நரகமும் சுவர்க்கமாக மாறும். கடலையும் தாண்ட முடியும். வானையும் வளைக்க முடியும்.

**புத்ர:** பாடலீ, இன்று வேண்டாம். அரண்மனைக்குப் போ. நாளை, பௌர்ணமி. கங்கைக் கரையில் உனக்காகக் காத்திருப்பேன். உன் மனம் அதுவரையில் உறுதியாயிருந்தால் வந்து சேர்,

**பாடலி:** நாதா, என்னால் நாளை வரையில் தனித்திருக்க முடியாது.

**புத்ர:** இல்லை, அரண்மனையில் உன்னைக் காணாவிட்டால் அமர்க்களம் ஏற்படும். இப்போது போ.

**பாடலி:** நிச்சயமாகக் காத்திருப்பீர்களா?

**புத்ர:** பஞ்சபூதங்கள் உள்ள அளவும், சந்திர சூரியர்கள் உள்ள அளவும் உனக்காகக் காத்திருப்பேன்.

**பாடலி:** தாங்கள் எந்த உலகத்தில் இருந்தாலும் தங்களை வந்து அடைவேன்,

*காட்சி மாற்றம்—துரிதமான சங்கீதம்—பல காலடிச் சத்தம்*

**ராஜா:** சேனாபதி, இந்தக் காவற்காரனைச் சித்திரவதை செய்யும்.

**சேனாபதி:** டே, உண்மையைச் சொல்லிவிடு. உயிரை இழக்காதே. (மௌனம்)

**ராஜா:** டே பதரே, எங்கே அவன்? சொல்லுகிறாயா இல்லையா? (மௌனம்) அவன் எப்படித் தப்பினான்?

சொல்லமாட்டாயா? டே, கொண்டா அதை!
[பளீரென்று சவுக்கடி சத்தம்]

**காவல்:** மகாராஜா!

**ராஜா:** சொல்! சொல்! (சவுக்கடி)

**காவல்:** மன்னிக்கணும் மகாராஜா....

**ராஜா:** என்னடா, மன்னிக்கிறது! (சவுக்கடி)

**காவல்:** ஐயோ விட்டுடுங்களேன். (சவுக்கடி மாறிமாறி விழுகிறது)

**பாடலி:** தந்தையே மன்னிக்கவேண்டும். (நிசப்தம்) தந்தையே, நான்தான் குற்றவாளி.

**ராஜா:** பாடலீ!

**பாடலி:** ஆம், நான்தான் புத்ரகரைத் தப்புவித்தேன்.

**ராஜா:** என்ன?

**பாடலி:** ஆம், தந்தையே. தங்களுடைய ஆசீர்வாதத்துடன் அவரிடம் இதோ போகப்போகிறேன்.

**ராஜா:** என்ன அது?

**பாடலி:** அவரையே என் எஜமானராக வரித்துவிட்டேன்.

**ராஜா:** பாடலீ, உனக்கு என்ன பித்தமா?

**பாடலி:** பித்தம் தெளிந்தது....கண் திறந்து விட்டது.

**ராஜா:** பாடலீ உளருதே. அந்தப்புரம் போ.

**பாடலி:** நான் போகவேண்டிய இடம் என் கணவரிடம்தான்.

**ராஜா:** நீ பிறந்த குலம் என்ன, கௌரவம் என்ன? எல்லாவற்றையும் மறந்து ஒரு ஆண்டியை மணக்கப்போகிறேன் என்ருல் கேட்பவர் சிரிப்பார்கள்.

**பாடலி:** குலமும் கோத்திரமும் கிழவர்கள் பேச்சு. என்னுடைய வாழ்வு என் கையில்தான் இருக்கிறது.

**ராஜா:** நீ, ராஜபுத்ரி.

**பாடலி:** நான் சுதந்திரமுள்ள ஸ்திரீ.

**ராஜா:** உன் கடமை உன் பிரஜைகளிடம்தான்.

**பாடலி:** என் உரிமையைப் பறிக்க யாருக்கும் அதிகாரம் இல்லே.

**ராஜா:** பாடலீ, பேசாமல் போகமாட்டாயா? நான் ராஜ்யத்தின் அதிபதி.

**பாடலி:** என்னை ஒன்றும் செய்ய முடியாது.

**ராஜா:** சேனுபதி, இளவரசியைக் காவலில் வை. (மௌனம்) ஏன் நிற்கிருய்?

**ராணி:** இதென்ன அசட்டுத்தனம்? அவள் உங்கள் குழந்தையல்லவா?

**ராஜா:** நீ இதில் தலேயிடாதே.

**ராணி:** அவள் உங்களே மீறி என்ன செய்துவிடுவாள்?

**ராஜா:** நீ போ....சேனுபதி, என் கட்டளேயை நிறைவேற்று.

**சேனுதிபதி:** உத்தரவு.

சோகமான கன சங்கீதம்—சிறைச்சாலே சப்தம்.

**காவல்:** யாரது, நில்.

**காஞ்சனே:** நான்தான்.

**காவல்:** யாரும் போகக்கூடாது.

**காஞ்சனே:** இளவரசிக்கு ஆகாரம் கொண்டு போகிறேன்.

**காவல்:** சரி, அதிக தாமதம் வேண்டாம். (ஙிசப்தம்)

**காஞ்சனா:** பாடலீ.

**பாடலி:** காஞ்சனையா?

**காஞ்சனா:** ஆமாம், மெதுவாய்ப்பேசு. காவல் கனமாக இருக்கிறது.

**பாடலி:** அதென்ன, ஆகாரமா?

**காஞ்சனா:** ஆம்.

**பாடலி:** ஆகாரம் எதற்கு? விஷம் கொண்டுவந்தால் திருப்தியடைவேன்.

**காஞ்சனா:** தைரியத்தை இழக்காதே.

**பாடலி:** நான் இருந்தும் ஒன்றுதான், இறந்தும் ஒன்று தான். நேற்று பௌர்ணமி போய்விட்டது. என் பிராணபதி எனக்காகக் காத்திருப்பார்.

**காஞ்சனா:** இப்போதும் நீ தப்புவாய்.

**பாடலி:** எப்படி?

**காஞ்சனா:** இதோ சாவி. என் ஆடையை அணிந்து கொண்டு கையில் பாத்திரத்துடன் போய்விடு.

**பாடலி:** நீ?

**காஞ்சனா:** நான் உள்ளேயிருப்பேன்.

**பாடலி:** நிஜமாகவா?

**காஞ்சனா:** ஆமாம். சீக்கிரம். (பூட்டு திறக்கும் சப்தம்)

**பாடலி:** காஞ்சனு...

**காஞ்சனா:** ஒன்றும் யோசிக்காதே. நேரமில்லை.

**பாடலி:** உன்னை நான் மறக்கமாட்டேன்.

**காஞ்சனா:** உபசாரம் வேண்டாம். ஜாக்கிரதை யாகப் போ.

**பாடலி:** *உன்னைக் கடவுள் காப்பாற்றுவார்.*

*பூட்டுச் சத்தம்—பாரா சத்தம். சங்கீதம்*

**பாடலி:** *(பாடுகிறாள்)*

**புத்ரகன் குரல்:** *காதல்! காதல்! காதல்!*

**பாடலி:** *மலர்ப் பந்தென மனமும் துள்ளுது*
*சொலற் கரியதோர் வேதனை மூளுது*
*நெஞ்சில் ஆசை நீளுதே.*

**புத்ரகன் குரல்:** *துன்பமின்றியோர் இன்பமு மில்லையே*
*துயரமென்பதும் மகிழ்வின் எல்லை*
*தோன்றும் மதியும் தேயுதே.*

**பாடலி:** *மூடும் முகிலிடை ரவியொளியேது*
*தேடும் இன்பம் பாழில் முடியுமோ*
*சேரும் துன்பம் எங்குமே,*

**புத்ரகன் குரல்:** *தன்னை யிழந்தோர் தரணியை ஆள்வர்*
*தங்கிடும் இன்பம் என்றுமே*
*தாங்கும் தர்மம் இதுவே.*

**இருவரும்:** *காதல்! காதல்! காதல்!*

**பாடலி:** *இதென்ன அவரைக் காணவில்லையே? எங்கே யிருக்கிறார்? (மௌனம்) ஏ பஞ்ச பூதங்களே, என் பிராணபதி எங்கு இருக்கிறார்? ஏ சந்திரனே! அவர் எங்கு சென்றார்? எங்கும் காணவில்லையே! ஏ காற்றே! கண்ணைச் சிமிட்டி மினுமினுக்கும் தாராகணங்களே! அவர் உங்கள் கண்ணிலும் படவில்லையா?*

*தூரத்தில் குழல் ஊதும் சத்தம்*

*அதோ! அன்னையின் மடியில் அவர் மோஹன ரூபம்! பிராணபதி! இதோ வந்துவிட்டேன்!*

*தடாலென்று பிரவாகத்தில் ஆள் விழும் சத்தம்—கனமான சங்கீதம்—மாற்றம்—அணிவகுப்பு நடையில் சங்கீதம்—ஒரு பெருங் கூட்டம் நடந்து வரும் சத்தம்——சத்தம் நிற்கிறது*

**ராஜா:** கவிஞரே, கங்கைக்கரையில் அவளைக் காணவில்லையே. (மௌனம்) என்னசெய்வது? எங்கே தேடுவது?

**கவி:** அவள் சேரவேண்டிய இடத்திலே சேர்ந்துவிட்டாள்.

**ராஜா:** என்ன?

**கவி:** புனிதமான வீர சுவர்க்கத்தில் தன் காதலனுடன் ஒன்றுபட்டுவிட்டாள்.

**ராஜா:** என்னுடைய மௌட்டிகத்தினால் வந்தது. இனி எந்த ஜென்மத்தில் என் கண்மணியைக் காண்பேன்!

**கவி:** அவர்களுடைய அன்பு புனிதமானது. உண்மைக் காதல் உலகத்துப் பண்டமல்ல. அது அழிவில்லாதது; சிரஞ்சீவியானது.

**ராஜா:** கவிஞரே, அவர்களுடைய அன்பை நான் இங்கேயே சாசுவதமாக்குவேன். அவர்கள் பெயரால் ஒரு பட்டணம் நிர்மாணிப்பேன். அதன் புகழ் பூமண்டலம் முழுவதும் வியாபிக்கும். உண்மையான உள்ளன்பின் நினைவுச் சின்னமாக அது என்றென்றும் நிலைத்து நிற்கும்.

*சங்கீதம்*

---

**அதுதான் பாடலிபுரம்!**

---

# ஜெயில்

கட்டுரைகள்



ப. ரா.



உணர்ச்சி நிறைந்த
புரட்சிகரமான கட்டுரைகள்



விலை ரூ. 1—8—0



கமலா பிரசுராலயம்
59, பிராட்வே : : சென்னை

# கவிக்குயில் நிலைய வெளியீடுகள்



1. *இயற்கையின் நடனம் (கவிதை)* ரூ. *1—8*

*(தே. ப. பெருமாள்)*

2. *முத்துக் குவியல் (கவிதை)* ரூ. *1—4*

*(சி. தேசிக விநாயகம் பிள்ளை) சுத்தானந்த பாரதியார், வெ. இராமலிங்கம் பிள்ளை முதலிய முப்பது பேர்களின் கவிதைத் தொகுதி)*

3. *கதைத் தொகுதி* ரூ. *1—0*

*(மறுமலர்ச்சி எழுத்தாளர்களால் எழுதப் பட்ட ஒன்பது கதைகள்)*


## ஸ்ரீ மகள் கம்பெனி

*22, பிராட்வே :: சென்னை*

# மின்னும் நக்ஷத்திரம்

## புதிய நவீனம்



சிரஞ்சீவி

அதிர்ஷ்ட ஹீனனுன நவீனன் எழுதிய "மின்னும் நக்ஷத்திரம்" (இந்த நூல் அல்ல; கதையில் வரும் நூல்) ஒருவராலும் பிரசுரிக்கப்படாம லிருந்து கடைசியில் பிரசுரிக்கப்படுகிறது. மனம் முறிந்த நவீனன் மறைகிறுன். அதன் பிறகு புஸ்தகத்துக்கு நல்ல வரவேற்புக் கிடைக் கிறது; பணம் வந்து குவிகிறது. நவீனன் யுத்தத்தில் சேர்ந்துவிட்டதாக அவனிடமிருந்து அவன் நண்பன் சரணனுக்குக் கடிதம் வரு கிறது. இவ்வளவுதான் கதை. புதிய மெருகில் எழுதப்பட்டிருக்கும் இந் நூலுக்கு வரவேற்பும் புதிய முறையில் இருக்குமென்பதில் ஐயமில்லே.

—கல்கி.



**விலே ரூ. 2**



**கமலா பிரசுராலயம்**

59, பிராட்வே :: சென்னே